# அபு லதா பம்மல் சாஸ்திரி

1975—ஆம் ஆண்டில் வியட்நாம் யுத்தம் அதிகார பூர்வமாக நிறுத்தப்பட்ட போது மகிழ்ச்சியடையும் இளைய தலைமுறையைச் சுமந்து நிம்மதிப் பெருமூச்சு விடும் வியட்நாம் தாய் ஒருத்தியின் இமை மூடிய கண்களைப் பாருங்கள்! கண்கள் விமானங்களாகவும், வடியும் கண்ணீர் சொட்டுக்கள் குண்டுகளாகவும் சித்தரிக்கப்பட்டுள்ளது! இந்தக் கார்ட்டூனை பாரீஸ் பத்திரிகையான எல் எக்ஸ்பிரஸ் வெளியிட்டிருந்தது. யுத்தம் முடிவடைந்து இன்று பத்தாண்டுகள் ஆகிவிட்டன. ஆனால் அதனுடைய பாதிப்புகள் இந்தக் கார்ட்டூனைப் போல் மறக்க இயலாதவை என்று வியட்நாம் யுத்தத்தின் போது நேரடியாக அங்கு சென்று செய்திகள் சேகரித்த அபு ஆபிரஹாம் தமது கட்டுரையொன்றில் குறிப்பிடுகிறார்.'

—இந்துஸ்தான் டைம்ஸ் நாளிதழிலிருந்து
அ. குமார்.

உலகப் புகழ்பெற்ற 'லதா மங்கேஷ்கர்' ஸ்டேஷன் பிளாட்பாரத்தில் பாட்டுப் பாடியதன்மூலம்தான்சினிமாவில்பாடும்வாய்ப்பு பெற்றார்!

அந்தக்கால இசையமைப்பாளரான 'குலாம் ஹைதர்' ஒருநாள் பிளாட்பாரத்தில் ரயிலுக்காகக் காத்திருந்த போது; அவரிடம் தன் இசைத் திறமையைக் காட்டினார் லதா! அதுவும் ஒரு காலி சிகரெட் டப்பாவில் தாளம் போட்டபடி பாடிக் காட்டினார்! இவரது குரலால் கவரப்பட்டு, குலாம் ஹைதர் தனது படத்தில் ஒரு பாடலுக்கு சான்ஸ் தந்தார்!' இதுதான் லதாவின் முதல் பாட்டு!

ஆதாரம்: காரவான்; தகவல்: சம்பத்குமாரி.

1983—ஆம் ஆண்டு வரை 'லால் பகதூர் சாஸ்திரி' பெயரில் இருந்த புதுதில்லி தெரு 'டிட்டோ' தெருவாக மாற்றப்பட்டு விட்டது! லால் பகதூர் சாஸ்திரியின் இரு புதல்வர்களில் ஒருவர் பார்லிமெண்ட் உறுப்பினர், மற்றவர் உ. பி. அமைச்சர்! இவர்கள் கூட இதை எதிர்க்க முடியவில்லை! பாவம், சாஸ்திரி! டிட்டோவின் பெயரை வைக்கடில்லியில் வேறு தெருவே கிடையாதா?

ஆதாரம்: காரவான்; தகவல்: சம்பத்குமாரி.

''சாரங்கதரன்'' என்ற நாடகத்தைத் தமிழில் எழுதினேன். முதன் முதலில் அதை எங்கள் சபையார் பெங்களூரில் நடித்துக் காட்டினார்கள். சாரங்கதரன் வெட்டுண்டவுடன் நாடகத்தை முடித்தோம். சபையிலே இருந்தவர்கள் ஒரே ஆர்ப்பாட்டம் செய்தனர். ''நாடகத்தைப் பார்த்துவிட்டுத் துயரத்துடன் வீட்டுக்குப் போக விரும்பவில்லை. சாரங்கதரனுக்கு உயிர் கொடுங்கள்'' என்று கூச்சலிட்டனர்! உடனே அவசரமாக ஒரு நடிகனுக்கு ரிஷி வேடம் போட்டுச் சாரங்கதரனுக்கு உயிர் கொடுக்கச் செய்தோம்! சாரங்கதரனாக நடித்த நான் உயிர் பெற்று எழுந்தவுடன் சபையோர் கைகொட்டிக் களிப்படைந்தார்கள்.

—பம்மல் சம்பந்த முதலியார் (நடிகன் குரல் 1958) தகவல்: பொதக்குடி அனீஸ்.





# ரஷ்யாவில் ராஜீவ்

பதவிக்கு வந்தவுடன் ராஜீவ் சென்ற முதல் வெளிநாடு ரஷ்யாதான். இப்போது பிரான்ஸ், அமெரிக்கா போன்ற நாடுகளில் சுற்றுப் பயணம் செய்து கொண்டிருக்கிறார். ராஜீவுடன் ரஷ்யா சென்ற பதினேழு பத்திரிகையாளர்களில் "இந்து" இணையாசிரியர் ராம் ஒருவர். அவரிடம் பேசிக் கொண்டிருந்த போது....



* ரஷ்யத் தலைவர்களின் மனைவியர் ஸோனியாவைப் பல இடங்களுக்கு அழைத்துச் சென்று காட்டினர்.

"முதல் விஜயமாக ரஷ்யாவை ஏன் ராஜீவ் தேர்ந்தெடுத்தார்?"

ரஷ்யா போய்ச் சேர்ந்த மறுநாளே நடந்த ஒரு பெரிய நிருபர் கூட்டத்தில் மேற்கண்ட கேள்வி எழுப்பப்பட்டது.

இந்தக் கேள்விக்கு ராஜீவின் பதில்:

"இந்தியாவின் பிரதமராக நான் பதவியேற்றதும் நல்லெண்ணப் பயணமாக ஏதாவது ஒரு நாட்டுக்குப் போக வேண்டும் என்று தீர்மானித்ததும், முதலில் மனத்தில் தோன்றியது ரஷ்யாதான். ரஷ்யா ஒரு நேச நாடு என்பதால் மட்டுமல்ல; அவர்கள்தான் என்னை முதலில் அழைத்தார்கள்".

ராஜீவின் தாத்தா நிருபர்கள் கூட்டத்தில் நிறையப் பேசுவார். தாயோ நிருபர்களையே மடக்குவார். ஆனால் ராஜீவ் எவ்வளவு பெரிய கேள்வியாக இருந்தாலும், மிகவும் சர்ச்சைக்குரிய விஷயமாக இருந்தாலும் ரத்தினச் சுருக்கமான பதில்தான் அளிப்பார். சிரிப்பதும் அளவோடுதான். அபூர்வமாக எதிர்பாராமல் நீண்ட பதில்கள் வரும்.

### என்ன பிரச்னை?

இரு நாட்டுத் தலைவர்களும் நடவடிப்பாகச் சந்தித்துப் பேசித் தீர்க்க வேண்டிய பிரச்னைகள் ஏதேனும் உள்ளதா? அப்படி ஏதும் இல்லை. ரொம்ப நாட்களாகவே மேல்மட்டத் தொடர்பு இல்லாத நிலை. ரஷ்யாவில் பிரஷ்நேவிற்குப் பிறகு பதவிக்கு வந்த ஆண்ட்ரபோவும், செர்னன்கோவும் உடல் நிலை சரியில்லாமலேயே ஜனாதிபதி ஆனார்கள். ஆதலால் முறைப்படி அவர்களைச் சந்தித்து உரையாட முடியவில்லை. செர்னன்கோ மறைவுக்கு அனுதாபம் தெரிவிக்க நேரில் ராஜீவ் சென்றிருந்த போது மற்ற விஷயங்களைப் பேச வாய்ப்பில்லை. ஆகவேதான் இந்த விஜயம். அதுவும் அக்டோபர் புரட்சியையே பார்க்காத கோர்பசேவ் சோவியத்

* குதிரை சாகசங்களை...



அதிபராகியிருக்கிறார். ருஷ்ய நோக்கில் இது மிகவும் இளம் வயது. நமது பிரதமரும் இளைஞர்.

## என்ன பேசினார்கள்?

பெரும்பாலும் பேசப்பட்டது பாகிஸ்தானுக்கு அமெரிக்கா அணு ஆயுதங்களைக் கொடுத்து உதவுவதைப் பற்றித்தான். ஆப்கானிஸ்தான் பிரச்னையில், அமெரிக்கா, புரட்சியாளர்களுக்கு பாகிஸ்தான் வழியாக ராணுவத்தளவாடங்கள் அனுப்புவது பற்றிக் கண்டனம் தெரிவிக்கப்பட்டது. ரஷ்யாவுக்கும் சரி, இந்தியாவுக்கும் சரி, பாகிஸ்தான் பெரிய விரோதியாகிக் கொண்டிருக்கிறது. ரீகனின் 'ஸ்டார்வார்' திட்டமும், இருதலைவர்களின் பேச்சினிடையே படு கண்டனத்துக்குள்ளாகியது.

* ராஜீவும் கோர்பசேவும் ஒப்பந்தங்களைப் பரிமாறிக் கொள்கிறார்கள்.



* ....ஆர்வமுடன் பார்த்தார் ராஜீவ்..



## ஆயிரம் கோடி கடன்

ராஜீவ் — கோர்பசேவ் பேச்சு வார்த்தையில் வர்த்தக ஒப்பந்தம் மிகவும் முக்கியமானது. இந்த ஒப்பந்தத்தின்படி ஆயிரம் கோடி ரூபாய் கடன் இந்தியாவுக்கு ரஷ்யா அளிக்கப் போகிறது. அதுவும் மிகவும் குறைந்த வட்டியில். கடனை 20 வருடத்தில் திருப்பிக் கொடுத்தால் போதும். இந்தப் பணத்தைக் கொண்டு: அனல்மின் நிலையங்கள், நிலக்கரிச் சுரங்கங்கள், பெட்ரோலியம் எண்ணெய்க் கிணறுகள் போன்றவைகளை நவீனப்படுத்தலாம் அல்லது புதிதாக உருவாக்கலாம். நமது நாட்டில் எக்கச்சக்கமாகத் தேங்கியிருக்கும் துணிகளை வாங்கிக் கொள்ள ரஷ்யா சம்மதித்திருக்கிறது.




### பத்து நிமிட நடை

கிரெம்ளின் மிகவும் பாதுகாக்கப்பட்ட இடம். பேச்சு வார்த்தைகள் செயிண்ட் கேதரின் ஹாலில் நடைபெற்றன. ராஜீவ் தாம் தங்கியிருக்கும் இடத்திலிருந்து கிளம்பு முன்னரே கோர்பசேவ், செயிண்ட் கேதரின் ஹாலுக்கு வந்து சேர்ந்து விட்டார். இது சாதாரணமாக எந்தத் தலைவருக்கும் காட்டப் படாத சிறப்பு மரியாதை என்று ரஷ்ய அதிகாரிகள் கூறுகின்றனர். எதிர்கொண்டழைத்துப் பேசிக்கொண்டே பேச்சுவார்த்தை நடக்கவிருக்கும் ஹாலுக்கு அழைத்துப் போனார். அப்பாதையின் இரண்டு பக்கமும் செடி கொடிகள். கிளையோடு ஒரு பூங்கொத்தைப் பறித்து ராஜீவிற்கு அளித்து விட்டு "வெட்ட, வெட்டத்தான் வளரும்" என்றார் கோர்பசேவ்!

### பாதுகாப்பு எப்படி?

"நமது பிரதமருக்குப் பாதுகாப்பு எப்படி?" என்று கேட்டதற்கு ராம் சொன்னார்:

"அவர்களது பாதுகாப்பு ஏற்பாடுகளே அலாதி! ஒரு இடத்துக்குத் தலைவர் செல்கிறார் என்றால் இரண்டு மணி நேரத்துக்கு முன்னரே போகும் பாதையை பயமற்ற பிரதேசமாக மாற்றிவிடுகிறார்கள். ஒரு கிராமத்துக்குச் செல்கிறார் என்றால், அந்த கிராமத்து மக்கள் தவிர வேறு எவரும் இருக்க முடியாது. சந்தேகத்துக்கு இடம் கொடுத்து யாரேனும் நடந்து கொண்டால், 'தள்ளி'க் கொண்டு போய் விடுகிறார்கள்!

### "அழக் கூட ஆளில்லை!"

ஒரு பக்கம் ஆசியா கண்டத்திலும் மறு பக்கம் ஐரோப்பா கண்டத்திலும் தனது பகுதிகளைக் கொண்டிருக்கும் மாபெரும் ரஷ்யாவில், மின்ஸ்க் என்னும் நகரத்துக்கு (போலந்துக்கு சமீபம்) ராஜீவ் விஜயம் செய்தார். மின்ஸுக்கு அருகில் 'கமர்' என்ற கிராமத்துக்குப் போனார். இரண்டாம் உலகப் போரில் ஹிட்லரின் படைகளால் தாக்கப்பட்டு மிகவும் சேதமடைந்த ஒரு கிராமம் கமர். ஒருவரைக் கூட அந்த கிராமத்தில் உயிரோடு விட்டு வைக்கவில்லையாம் ஹிட்லரின் படைகள். அழுவதற்குக் கூட ஆளில்லை! அங்குள்ள நினைவுச் சின்னத்துக்குச் சென்று அஞ்சலி செலுத்தினார் ராஜீவ். அங்கு நீண்ட நேரம் செலவழித்தார்.

அடுத்து ராஜீவ் போன இடம் ஆசிய கண்டத்து ரஷ்யாவில் (சைனாவுக்கு சமீபம்) உள்ள ஃப்ரன்ஸே என்னும் நகரம். இங்கு 'இஸிக்குல்' என்ற இடத்தில் மிகப் பெரிய ஏரி இருக்கிறது. 800 மீட்டர் ஆழம் என்றால் பார்த்துக்கொள்ளுங்களேன்! அதையொட்டி குதிரைச் சாகசங்கள் செய்யும் வீரர்கள் இருக்கிறார்கள். ஆனால் ராஜீவ் போன அன்று மழை பெய்து கொண்டிருந்ததால், சில வகையான குதிரைச் சாகசங்களை மட்டுமே செய்து காட்டினார்கள். இதில் ரொம்ப வருத்தம் பிரியங்காவுக்கும் ராகுலுக்கும்தான். இந்த இடத்தில்தான் ராஜீவ் குடும்பத்தினர் ஓய்வெடுக்க அவகாசம் கிடைத்தது.

### பழக்கத்தை-மாற்றிய மனைவியர்

பொதுவாகவே ரஷ்யத் தலைவர்களின் மனைவியர் விருந்திலும் வரவேற்பிலும் கலந்து கொள்வதில்லை. ஆனால் இந்த முறை பழக்கம் மாற்றப்பட்டது. கோர்பசேவின் மனைவியும், வெளியுறவு மந்திரி குரோமிகோவின் மனைவியும், சோனியாவையும், பிரியங்கா, ராகுல் ஆகியோரையும் பார்க்க வேண்டிய பல இடங்களுக்கு அழைத்துச் சென்றார்கள்

### என்ன கொடுத்தார்?

வெளி நாட்டுக்கு நம் தேசத் தலைவர்கள் சென்றால் பரிசாகக் கொடுக்க நடராஜர் சிலை, தஞ்சாவூர் தட்டு போன்றவற்றை எடுத்துச் செல்வார்கள். ஆனால் ராஜீவ் இதிலும் ஒரு மாறுதல் செய்தார். ஆம், அவர் சோவியத் தலைவர்களுக்குக் கொடுத்தது: ஒரு கூடை மாம்பழம்!

பேட்டி: **ப்ரியன்**

# ஸி. ஏ. பற்றி சில வார்த்தைகள்

## எதிர்காலம் உங்கள் கையில்

இட ஒதுக்கீடு பற்றி காரசாரமான சர்ச்சைகள் நடந்து கொண்டிருக்கிறபோது அந்த மாதிரி 'கோட்டா' எதுவுமில்லாமல், முழுக்க முழுக்கபுத்திசாலித்தனத்தின் அடிப்படையிலேயே சேர்ந்து தேர்வு பெறக் கூடிய படிப்புகள் ஸி. ஏ.: ஐ. ஸி. டபுள்யூ. ஏ.: ஏ. ஸி. எஸ். ஆகியவை.

தற்போது அதிக அளவில் இளைஞர்களைக் கவர்கிறது ஸி. ஏ. என்கிற சார்ட்டர்டு அக்கௌண்டன்ட் படிப்பு.

வேடிக்கை என்னவெனில், முதலில் ரொம்ப ஆர்வமாய்ச் சேர்ந்துவிட்டு அப்புறம் பலர் படித்துக் கொண்டே இருக்கிறார்கள் பல வருடங்களுக்கு!

ஸி. ஏ.வின் முதல்படி நுழைவுத் தேர்வு. இதற்குக் குறைந்தபட்ச வயது 16. டிகிரி படித்தவர்கள், படிக்கிறவர்கள் இதற்கு தகுதியானவர்கள். நுழைவுப் பரீட்சையில், அக்கௌண்ட்ஸ், இங்கிலீஷ், பிஸினஸ் மாதமாடிக்ஸ், போன்று நாலு பேப்பர்கள்.

இதில் தேறினதும் யாராவது ஓர் ஆடிட்டரிடம் 'ஆர்டிகிள்டு கிளார்க்' ஆக வேண்டும். அதன்பின், இன்ஸ்டிட்யூட் ஆஃப் இண்டியா (தென் பிராந்திய அலுவலக முகவரி 102, நுங்கம்பாக்கம் நெடுஞ்சாலை, சென்னை—34)வில் மெம்பராக வேண்டும். இதற்கு விண்ணப்பம், கட்டணம் எல்லாம் உண்டு. (காமர்ஸ் படித்தவர்களுக்கு சிறு கட்டணச் சலுகை).

சேர்ந்து ஒன்பது மாதங்களானதும் 'இன்டர்' எனப்படும் இன்டர்மீடியட் பரீட்சையில் உட்காரலாம். இன்ஸ்டிட்யூட் அவ்வப்போது பல்வேறு பாடங்களிலும் நடத்தும் தேர்வுகளில் நல்ல மார்க் வாங்கினால்தான் 'இன்டர்' எழுத அனுமதி கிடைக்கும். இதில் இரண்டு குரூப்புகள். மொத்தம் ஏழு பேப்பர்கள். ஒரு குரூப்பில், ஏதாவது ஒரு பேப்பரில், ஊற்றிக் கொண்டால், மறுபடி, அந்த குரூப்பில் எல்லா பேப்பர்களையும் எழுத வேண்டும்! .

இதனைப் பூர்த்தி செய்தால், மூனு வருஷத்தில் ஃபைனல். இதிலும் இரண்டு குரூப்புகள். ஒவ்வொன்றிலும் வெவ்வேறு பேப்பர்கள். இங்கேயும், ஒரு குரூப்பில் ஏதாவது ஒரு பேப்பரில் போய் விட்டால், மறுபடி முழு குரூப்பையும் எழுத வேண்டிய கட்டாயம்.

ஆர்டிகிள்டு கிளார்க்குகளுக்கு ஃபைனல் எழுது முன் மூன்று வருட காலத்துக்கு ஸ்டைபண்டு உண்டு.

ஸி. ஏ. பண்ணுவது கஷ்டமா? ஆமாம்... ஸி. ஏ. பண்ண ஆரம்பிக்கும்போது இருக்கிற ஆர்வம்பலருக்கு நாளடைவில் குறைந்து போய் விடுவதற்கு இதுதான் காரணம். விடாப்பிடியாகக் கடைசி வரை பலர் உழைப்பதில்லை.

"பி. காம். பண்ணினவர்களுக்குத்தான் ஸி. ஏ. சுலபமாக இருக்குமோ?"

"இது முழுக்க முழுக்க உண்மை என்று சொல்ல முடியாது. பி. எஸ். ஸி.யில் கெமிஸ்ட்ரி, ஸுவாலஜி படித்தவர்கள் ப்ராப்ளம் இல்லாமல் பாஸ் செய்வதும், பி. காம். படித்தவர்கள், முடிக்கத் திணறுவதும் சகஜம்.

° ° ° ° °

ஸி. ஏ. போலவே இன்னொரு படிப்பு ஐ. ஸி. டபுள்யூ. ஏ. ஐ. அதாவது இன்ஸ்டிட்யூட் ஆஃப் காஸ்ட் அண்ட் ஒர்க்ஸ் அக்கௌண்ட்ஸ் ஆஃப் இண்டியா. இதிலும் என்ட்ரன்ஸ், இன்டர், ஃபைனல் எல்லாம் உண்டு. பரீட்சையில் இரண்டு குரூப்புகள். ஒரு குரூப்பில் ஒரு பேப்பரில் போய் விட்டால், முழு குரூப்பையும் மறுபடி எழுத வேண்டிய கஷ்டம் இங்கேயும் உண்டு என்றாலும் இதில் சேருபவர்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் அதிகரித்து வருகிறது.

° ° ° ° °

இதேபோல இருக்கும் மற்றொரு படிப்பு ஏ. ஸி. எஸ். என்கிற கம்பெனி செக்ரட்டரி படிப்பு. இது முடித்தாலும் நல்ல எதிர்காலம் உண்டு. தகுதி, பரீட்சை விவரங்கள் முன்னர் சொன்ன மாதிரியேதான்.

எஸ். சந்திரமௌலி

## கண்டுபிடியுங்கள்— பார்க்கலாம்!





முக்கோணம்

இதில் சிறிய—பெரிய முக்கோணம் எத்தனை உள்ளது?

விடை: 18 முக்கோணங்கள்

தகவல்: 'புதுவை நித்திலன்'



பருவத்தின் எல்லையில் என் பாசத்துக்குரிய மகள். சங்கடமான இந்தக் காலகட்டத்தில் அந்த இளம் உள்ளம் படும் வேதனை, தாயாகிய எனக்குத் தான் புரியும்.

## “என் மகளுக்கு கேர்ஃப்ரீ வாங்கித் தர நான் முடிவு செய்தது ஏனென்றால்”..

ஒரு சிறுமியின் வாழ்க்கையில் அவள் வயதுக்கு வரும் காலகட்டம் தவிர்க்க முடியாத ஒன்றாகும். பயமும், வெட்கமும், தவிப்பும் நிறைந்து, உடலளவில் மட்டுமின்றி மனத்தளவிலும் அவள் பாதிக்கப்படும் நேரமும் அதுதான்.

நான் ஒரு தாய். இந்தக் காலகட்டத்தை அனுபவித்தவள். அதன் சிரமங்களை நன்கு உணர்ந்தவள். குறிப்பிட்ட அந்த ஐந்து நாட்களும் ஒவ்வொரு பெண்ணுக்கும் ஏற்படும் சங்கடமும் தொல்லையும் எனக்கு நன்றாகவே தெரியும்

---

**இத்தனை வருடங்களாக, சானிடரி பாதுகாப்புக்குத் தேவையானதை நான் வீட்டிலேயேதான் தயாரித்துக் கொள்வேன். அது மிகவும் தர்மசங்கடமான வேலைதான்!**

---

மீண்டும் மீண்டும் பயன்படுத்துவதற்காக நன்றாகத் துவைத்து, காயப்போட்டு... போதும் போதும் என்றாகி விடும். அக்கம் பக்கத்தில் உள்ளவர்களுக்குக் கூட நமது 5 நாள் பிரச்னை விளம்பரப்படுத்தப்பட்டு விடும். இத்தனை அவஸ்தைப் பட்டாலும்,

நமக்குத் தேவையான சானிடரி பாதுகாப்பு கிடைக்குமா என்பதும் நிச்சயமில்லை. அது மட்டுமல்ல; எப்போது எந்த அசம்பாவிதம் நடந்து அவமானப்பட வேண்டி வருமோ என்று பயந்து நடுங்கிக் கொண்டே இருக்க வேண்டும்.

என்னைப் பொறுத்தவரையில் இதிலெல்லாம் ஓரளவு பழக்கப்பட்டுவிட்டேன் என்றே சொல்லலாம். தவிர, அந்தக் காலத்தில் சங்கடமான அந்த 5 நாட்களில் பெண்கள் வெளியே போவது என்கிற வழக்கமெல்லாம் அறவே கிடையாது.

---

**ஆனல் இப்போது காலம் மாறிவிட்டது... பெண்கள் மாதத்தின் அந்த 5 நாட்களில்கூட துடிப்பாக செயல்பட வேண்டியுள்ளது.**

---

ஆனல் இப்போது காலம் மாறிவிட்டது. இப்போது கேர்ஃப்ரீ போன்ற நவீன சானிடரி பாதுகாப்பு கிடைக்கும் இந்த நாளில், என் மகளும் நான் இளம் பெண்ணாக இருந்ததைப் போலவே ஏன் வீட்டிற்குள் அடைபட்டுக் கிடக்கவேண்டும். நான் வளர்ந்த காலம் வேறு; என் மகள் வளரும் சூழ்நிலைவேறு இன்றைய சிறுமிகள் மாதத்தின் அந்த 5 நாட்களில் கூட துடி துடிப்பாக செயல்பட வேண்டியுள்ளது.

என் மகளைப் பாருங்களேன். அவள், நான் இளம் பெண்ணாக இருந்த காலத்தில் செயல்பட்டதைவிட மிக...மிக சுறுசுறுப்புடன் செயல்பட வேண்டியிருககிறது...படிப்பு விஷயத்திலும் சரி, இதர வேலைகளிலும் சரி. நாங்கள் இருந்ததைப் போல என் மகளையும் வீட்டிற்குள் முடக்கிப்போட நான் விரும்பவில்லை.

அதனால்தான் நான் கேர்ஃப்ரீயைத் தேர்ந்தெடுத்தேன். என் மகளின் துடிப்புக்கும் துள்ளலுக்கும், ஆட்டத்துக்கும் ஓட்டத்துக்கும் ஈடு கொடுக்கும் இணைபிரியாத் தோழி கேர்ஃப்ரீ.

முக்கியமான அம்சம் என்னவென்ருல் கேர்ஃப்ரீ ஒரு ரெடிமேட் நாப்கின். துணியையும் பஞ்சையும் வைத்து மடித்து, நேரத்தை வீணக்கும் தொல்லை கிடையாது.

நான் அந்தக் காலத்தில் செய்தது போல என் மகள் துவைத்து, காயப் போட்டு, சங்கடப்பட வேண்டியதில்லை. தேவையான நேரத்திலே சட்டென்று புத்தம் புதுசாக, சுத்தமான ஒரு நாப்கினை எடுத்து அவள் உபயோகிக்கலாம்.

ஒரு விஷயத்தை நான் ஒப்புக்கொண்டாக வேண்டும். முதலில் எனக்கு இத்தகைய ரெடிமேட் நாப்கின்மீது கொஞ்சம் அவநம்பிக்கை இருக்கவே செய்தது. ஆனல், இப்போது என் மகள் மாசாமாசம் கேர்ஃப்ரீ பயன்படுத்தி மகிழ்ச்சியோடு இருப்பதைப் பார்த்ததும் எனக்குப் பூரண நம்பிக்கை ஏற்பட்டு விட்டது. தேவையான சானிடரி பாதுகாப்புக்கும், அசம்பாவிதம் எதுவும் நடக்காமல் தடுக்கவும் சானிடரி நாப்கின் பெரிதாக, கனமாக இருக்க வேண்டும் என்று நான் எண்ணி வந்தது தவறு என்பது இப்போது விளங்குகிறது.

கேர்ஃப்ரீ உபயோகிப்பதால் சுகமாகவும் பாதுகாப்பாகவும் உணர்வதாக என் மகளே சொல்கிருள். பயமின்றி, கவலையின்றி வெளியே சுற்றவும் முடிகிறது என்றும் கூறுகிருள். அப்பாடா! எனக்கு ஒரு கவலை விட்டது.

---

**கேர்ஃப்ரீ பயன்படுத்துவதில் சிரமமோ சிக்கலோ எதுவுமே கிடையாது. இதனலேயே என் மகளுக்கு எந்த விதமான பிரச்னையும் இல்லை. அதைக் குறித்து நான் சந்தோஷப்படுகிறேன்.**

---

எனக்குக் கிடைக்காத ஒரு சுதந்திரமும் பாதுகாப்பும் கேர்ஃப்ரீ மூலம் என் மகளுக்குக் கிடைத்திருப்பதைப் பார்த்துப் பூரிப்படைகிறேன். ஒரு பெண்தான—அதுவும் ஒரு அன்னைதான்—என்னுடைய மன உணர்வுகளைச் சரியாகப் புரிந்துகொள்ள முடியும்.

காலத்தோடு நாமும் மாறியாக வேண்டும். அதுவும் நமக்கு அதிக சுதந்திரமும் பாதுகாப்பும் தருகிற கேர்ஃப்ரீ வடிவிலே அந்த மாற்றம் இருக்குமானல், அதை நாம் வேண்டாம் என்று ஒதுக்குவானேன்?




*கேர்ஃப்ரீ சானிடரி நாப்கின்கள்—பூரண சுகம், பரிபூரண பாதுகாப்பு—மாறுகின்ற காலத்துக்கேற்ற மகத்தான வசதி.*

கிடைக்கிறது. 10 உள்ள பேக் மற்றும் சிக்கனமிக்க 20 மற்றும் 30 உள்ள பேக்குகளிலும்

தனியாகவும் கிடைக்கிறது. கேர்ஃப்ரீ 10 உள்ள பேக்கில்

Johnson & Johnson

OBM/5070/TAM



கல்கி

1985 ஜூன் 16.
மலர் 43 இதழ் 46
குரோதன ஆனி 2

# பழிவாங்கப்பட்டார் பாட்டீல்!

மகாராஷ்டிர முதல்வர் திடீரென்று பிரதமருக்கு வேண்டப்படாதவராகி பதவி இழந்துவிட்டிருக்கிறார். சிவாஜி ராவுக்கு அப்பதவி வெள்ளித் தட்டில் வைத்து வழங்கப்பட்டிருக்கிறது.

அப்படி என்ன பெரிய தப்பு செய்துவிட்டார் பாட்டீல்? 'பிரதமராகவும் ஆளும் கட்சித் தலைவராகவும் ஒருவரே இருப்பது ஆரோக்கியமானதல்ல' என்ற அவர் கருத்து புதுமையானதல்ல. எத்தனையோ பெருந் தலைவர்கள் காரணங்களை நன்கு விளக்கி எத்தனையோ காலமாகக் கூறி வந்திருப்பது தான். இதற்காகப் பிரதமர் ஆத்திரமடைவானேன்? பாட்டீலைப் பலி வாங்குவானேன்?

'பம்பாய்க்குள் மேன்மேலும் மக்கள் வந்து குடிபுகுவதைக் கட்டுப்படுத்த வழி காண வேண்டும்' என்ற பாட்டீலின் கருத்து தேசிய ஒருமைப்பாடு, மக்களின் அடிப்படை உரிமைகள் என்ற நோக்கில் பார்க்கும்போது ஏற்கத் தக்கதல்லதான். ஆனால் பாட்டீல் என்ன சட்டமா இயற்றி விட்டார்? பம்பாயின் பெருகி வரும் ஜனத்தொகைப் பிரச்னையை மனத்தில் கொண்டு ஒரு கருத்தை வெளியிட்டு ஒரு விவாதத்தைத் தொடங்கி வைத்திருக்கிறார். அவ்வளவு தானே? இதிலிருந்து பயனுள்ள மாற்றுக் கருத்துக்கள் வெளி வரலாம் அல்லவா? இதற்காக அவர் பதவி துறக்குமாறு செய்யப்பட வேண்டுமா?

'மகாராஷ்டிர இ. காங்கிரஸ் தேர்தல் சமயத்தில் சுறுசுறுப்படைந்து மற்ற சமயங்களில் கட்டுப்பாடற்றுக் கிடக்கிறது' என்றார். இதில் என்ன தவறு? தனி நபரானாலும் ஓர் அமைப்பு அல்லது நிறுவனமானாலும் சுய விமர்சனம் வளர்ச்சிக்கு இன்றியமையாததல்லவா? இதற்காக அவர் பழி வாங்கப்பட வேண்டுமா?

பிரதமரின் நெருங்கிய தோழர்களை 'கம்ப்யூட்டர்காரர்கள்' என்று பாட்டீல் வர்ணித்ததுதான் பெருங் குற்றமாகி விட்டது என்கிறார்கள். எலெக்டிரானிக் யுகத்தை இந்தியாவில் புகுத்தத் துடியாக உள்ள ராஜீவும் அவரைச் சேர்ந்தவர்களும் நியாயமாக இதற்குப் பெருமைப்படலாமே! 'ஆமாம் நாங்கள் நவீன நோக்குடையவர்கள்தான்' என்று கூறி விட்டுப் போக வேண்டியது தானே?

பாட்டீலை டில்லிக்கு வரவழைத்து இரண்டு நாள் பார்க்காமலிருந்து அவமானப்படுத்தி அனுப்பினார் பிரதமர். முதல்வரின் விருப்பத்துக்கு விரோதமாக பிரபா ராவ் மகாராஷ்டிர இ. காங்கிரஸ் தலைவராக நியமிக்கப்பட்டார். இப்படி ஒரு பனிப்போர் நடத்தி பாட்டீல் ராஜினாமா செய்ய வேண்டிய சூழ்நிலையை உருவாக்கிவிட்டது தலைமைப் பீடம்.

கட்சிக்குள் கருத்து மாறுபாடு என்பது கட்சித் தலைமையை எதிர்க்கிற புரட்சியாகக் கருதப்பட அவசியமில்லை. ஆமாம்சாமிகள்தான் பதவிகளைப் பெற முடியுமெனில் அது ஜனநாயகத்தில் முரண்பாடு; கட்சிக்கோ நாட்டுக்கோ நல்லதல்ல.

பிரான்ஸுக்கும் அமெரிக்காவுக்கும் போயிருக்கும் ராஜீவ் அங்கெல்லாம் நிலவும் உட்கட்சி ஜனநாயகம் பற்றிக் கொஞ்சம் தெரிந்து கொண்டு திரும்பட்டும்.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா—பாரதியார்



# பாராட்டுவதில் எதற்குக் கஞ்சத்தனம்?

சுவாமி மலைக்கு ஒரு கல்யாணத்துக்காகப் போயிருந்தேன். பெயரில்தான் மலை இருக்கிறதேயொழிய தகப்பன் சுவாமி கோயில் செயற்கையாக எழுப்பப்பட்ட உயரத்தில் அமைந்திருப்பதாகச் சொன்னார்கள். நம்பவே முடியவில்லை. அத்தனை படிகள் ஏற வேண்டியிருந்தது. இத்தனைக்கும் பாறைகள் அகப்படாத பகுதி; மன்னர்கள் காலத்துக்குப் பிற்பட்ட கோயில்! சுவாமிநாதர் கம்பீரமாக நெடிதுயர்ந்து நிற்கிறார். வேல், இரண்டு 'டயமண்ட்' சின்னங்களை இணைத்த மாதிரி. ஹிந்தோளத்தில் கேட்ட அர்ச்சனை இன்னும் செவிகளில். கோயில் புதிதாகக் கும்பாபிஷேகம் ஆகி, எங்கும் சிமெண்ட்தனம். சுத்தம். வெளியே வந்தால்தான் வழக்கமான தெருக்குப்பை. கூளம். அழுக்கு. அன்று மாப்பிள்ளை அழைப்பு கோயிலிலிருந்து தொடங்கு முன்னரே, தகதகக்கும் தங்கத் தேரில் முருகன் பவனி வரப் புறப்பட்டார். கண் கொள்ளாக் காட்சி. புண்ணிய க்ஷேத்திரங்களில் உறவினர், நண்பர்கள் திருமணம் நடந்தால் இரட்டிப்பு மகிழ்ச்சிதான்.

* * * * *

கும்பகோணத்துக்கு நான் வந்திருப்பது அறிந்து சகோதரர்களான இரு அன்பர்கள் காண வந்தார்கள். நெட்டி வேலை செய்யும் கலைஞர்கள். மினி மதுரைக் கோயிலைத் தத்ரூபமாக உருவாக்கிப் பரிசு பெற்றவர்கள். படத்தைப் பாருங்கள். அதிலுள்ள ஒரு கோபுரத்தை மட்டும் ஐந்தாறு பகுதிகளாக நெட்டியில் தயாரித்து பூச்சி மருந்து கலந்த பசையால் இணைக்க வேண்டும் என்றால், கோயில் முழுவதையும் உருவாக்க எத்தனை பாடுபட வேண்டும்! எனவே அளவுக்கேற்ப இதன் விலை ரூ 300 முதல் 3000 வரை இருக்கும்!

விகிதாசாரம் மாறாமல் குறைந்த பரிமாணத்தில் மதுரைக் கோயிலைத் தயாரிக்க முதலில் ஒரு வரைபடம் தேவையல்லவா? அதை யார் தயாரிப்பார்கள்? 'ஆர்கிடெக்ட்' யாரையாவது அணுகுவார்களா? சிரித்தார் சிகாமணி. ''அதெல்லாம் ஒன்றுமில்லை. நாலாம் கிளாஸுக்கு மேல் படிக்காத எங்கள் தகப்பனார் சதாசிவம்தான் வரைபடம் தயாரிப்பார். அதை அவர் மதுரையில் எழுதவும் அவசியமில்லை. ஒரு தடவை பார்த்துவிட்டு வந்தாரானால் இங்கேயே எங்கள் கலைக் கூடத்திலேயே அமர்ந்து தயாரித்து விடுவார்!''

தம்பி பாலுமணிக்கு இந்தத் தொழில் நசித்துப் போய் வருவதாகக் கவலை. கலை பயில வருகிறவர்கள் வேறு வேலை கிடைத்தால் இந்தக் கஷ்டமான பணியை விட்டு விடுகிறார்களாம். எனவே உடல் ஊனமுற்றவர்களை இந்தத் தொழிலில் ஊக்குவித்து வரும் இந்த இரு கலைஞர்களுக்கு இரு

* மணி கிருஷ்ணசாமி பதிவு செய்துள்ள காஸெட்டின் வெளியீட்டு விழாவுக்குத் தலைமை தாங்கியவர் வாக தேவாச்சாரியாரை ஆதரித்த கலா க்ஷேத்திரத்தின் தலைவி ருக்மிணி தேவி. முதல் காஸெட்டைப் பெற்றுக் கொண்டவர் ஸ்ரீமதி எம். எஸ்.

* ''வகுல் மன்னன்''



மனக்குறைகளும் உள்ளன. முதலாவது எவ்வளவோ எடுத்துச் சொல்லியும் உடல் ஊனமுற்றவர்களை இந்தத் தொழிலில் ஈடுபட செய்து ஊக்குவிக்க சம்பந்தப்பட்ட அரசு இலாக்கா சிரத்தை காட்டவில்லை. இரண்டாவது மூலப் பொருளான நெட்டி (நீர் நிலை ஓரம் வளரும் தாவரம்) தமிழகத்தில் முன்பு காடாக வளர்ந்திருந்தது. இன்று அரிதாகிவிட்டது. ஆந்திராவிலிருந்து தருவிக்க வேண்டியிருக்கிறது. அதன் விலையோ நாளுக்கு நாள் உயர்த்தப்பட்டு வருகிறது!

* * * * *

பாராட்டுக்குரிய மற்றொரு கலைஞர் மணி கிருஷ்ணசாமி. தமது குருநாதர்களில் ஒருவரான மைசூர் வாசுதேவாச்சாரியாருக்கு அஞ்சலி செலுத்தும் விதமாக அவரது பாடல்கள் சிலவற்றை காஸெட்டில் பதிவு செய்திருக்கிறார். மணியின் குரல் வளத்தைப் பாராட்டுவதா; ஒவ்வொரு பாடலையும் அதன் ஒவ்வொரு கார்வையையும், சங்கதியையும், கச்சிதமான நிரவல் ஸ்வரப் பிரஸ்தாரங்களையும் அனுபவித்துப் பாடியிருக்கும் விதத்தைப் பாராட்டுவதா; ஹம்ஸத்வனி, நாடகப் பிரியா, சாமா, ரஞ்சனி, பூர்வி கல்யாணி, ஆகிய ராகங்களில் அமைந்த கீர்த்தனைகளையும் கருட்டியில் அமைந்த தில்லானாவையும் தேர்ந்தெடுத்த நேர்த்தியைப் பாராட்டுவதா அல்லது காஸெட்டின் வெளியீட்டு விழாவுக்குத் தலைமை தாங்கவும் முதல் காஸெட்டைப் பெற்றுக் கொள்ளவும் பொருத்தமான





• கோமணி

• நெட்டி வேலையில் மதுரைக் கோயில்.





* திருவாரூரில் தியாகையர் இல்லம் இப்போது அளிக்கும் தோற்றம்.

நபர்களை அழைத்து வந்து விட்ட சாமர்த்தியத்தைப் பாராட்டுவதா? இதில் கஞ்சத்தனமென்ன? எல்லாவற்றையுமே தாராளமாகப் பாராட்டி வைத்தால் போயிற்று.

* * * * *

அதென்னவோ தெரியவில்லை, தகுதியுள்ளவர்களைத் தகுதியான காரியத்துக்குப் பாராட்டும்போது கூட சில சமயம் கஞ்சத்தனம் வந்து புகுந்து கொள்ளத்தான் செய்கிறது. திருவாரூரில் மும்மூர்த்திகளின் இல்லங்களைப் புதுப்பிக்கும் பணி நிறைவெய்தி திறப்பு விழாவும் இசை விழாவும் பெரிய அளவில் நடந்து முடிந்தன. என்றாலும் சிலருக்கு 'அடடா, விக்னமின்றி இப்படி, எல்லாம் சிறப்பாக நடந்து முடிந்து விட்டதே!' என்று வருத்தம் போலிருக்கிறது. 'லால்குடிக்குக் கர்வம் வந்துவிட்டது. தம்மால்தான் நடந்தது என்று மார் தட்டுகிறார்!' என்பது போல் ஒரு பத்திரிகை எழுத, இன்னொரு சஞ்சிகை, திருவையாறு போல் இங்கும் கோஷ்டிச் சண்டை வராதிருக்க வேண்டுமே' என்று தேவையின்றிக் கவலைப்படுகிறது. உண்மை என்னவென்றால் எல்லாம் க்ஷேமமாக நன்கு நிறைவேறியதற்குக் காரணம், இசை மும்மூர்த்திகளும் காஞ்சி பரமாச்சார்யாளும்தான். லால்குடி ஒரு கருவி, அவ்வளவே. மூன்று லட்சம் திட்டம் பத்து லட்சமாக விரிவடைய வசூலானதோ பதினைந்து லட்சம் என்னும்போது பரமாச்சார்யாள் தமக்கே உரிய பெருந்தன்மைப் புன்னகையுடன், "வாசிப்பதில் தான் மன்னன் என்று நினைச்சேன்; வசூலிலும் மன்னனாயிருக்கியே!" என்று ஆசி வழங்குமுகமாகச் சொன்னாலும் 'கிரெடிட்' முழுவதும் பரமாச்சாரியாளுக்குத்தான் என்பது யாருக்குத்தான் தெரியாது? தியாகையர், சாமா சாஸ்திரிகளின் வீடுகளை முன்பிருந்தது போலவே புதுப்பிக்க ஆன செலவு போக மீதம் அறக்கட்டளையாகி விட்டது. வருகிற வட்டி வீடுகளைப் பராமரித்து வரவும் இசை விழாக்கள் நடத்தவும் பயனாகப் போகிறது.



* முன்பிருந்த நிலை.

ஒரு ரசமான தகவல்: இன்றைக்குப் பல ஆண்டுகளுக்குமுன் திருவாரூரில் மும்மூர்த்திகளின் இல்லங்கள் எவை என்பது கூடத் தெரியாமல் இருந்த காலத்தில் ரிஜிஸ்திரார் காரியாலய தஸ்தாவேஜுகளையெல்லாம் ஆராய்ந்து 'இவைதாம்' என்று சாட்சியத்துடன் நிரூபித்த புண்ணியத்தைக் கட்டிக் கொண்டவர்கள்டி. எஸ். வேங்கடராமய்யரும் பேராசிரியர் சாம்பமூர்த்தியும்தான்!

— கி. ராஜேந்திரன்.

# மழை வரவழைப்பாரா சிவபாலயோகி?

பெங்களூரில் தற்போது அடிபடும் பேச்சு, திப்ப கொண்டன ஹள்ளி (சுருக்கமாக—டி ஜி ஹள்ளி) நீர்த் தேக்கம் மழை பெய்து நிரம்புமா? டி ஜி ஹள்ளியிலிருந்து தான் நகருக்குக் குடிநீர் விநியோகம் செய்யப் படுகிறது.

பதினைந்து தினங்களுக்கு மட்டுமே காணக் கூடிய அளவுக்கு நீர்த் தேக்கத்தில் தண்ணீர் குறைந்ததும், பெங்களூர் குடிநீர் வடிகால் வாரியம் சிவபால யோகியை வரவழைத்து மழைக்காகத் தியானம் செய்ய வேண்டிக் கொண்டது....

சிவபாலயோகியை பெங்களூரில் அவரது ஆசிரமத்தில் சந்தித்து உரையாடினோம்.

ஜெயநகரை ஒட்டிய ஜெ.பி. நகரில் பிரம்மாண்டமான ஆசிரமம். தென்னை மரங்கள் வரிசையாக நிற்க, பாதி உருவான கல்யாண மண்டபம் முன்னே தெரிந்தது. உள்ளே யோகியின் செவர்லே காரும், பென்ஸ் காரும். ஆசிரமம் நல்ல நவீனமான கட்டிடம். மாடியில்தான் யோகி இருந்தார்.

**சுவாமிகள் சந்நியாசியாய் இருந்து கொண்டு இப்படி ஆடம்பரமான ஆசிரமத்தில் இருக்கலாமா? கலர் டி. வி. எல்லாம் தேவைதானு?**

எல்லாம் பக்தர்கள் கொடுத்ததப்பா! நானு கேட்கிறேன்? நானு பார்க்கிறேன்?

**சுவாமிகளுக்கு இலங்கையில் நிறைய சீடர்கள் இருக்கிறார்களாமே? அதிலும் அதிபர் ஜெயவர்த்தனு, பிரதமர் பிரேமதாசா எல்லாம் உங்கள் பக்தர்களாம். ஏன் அங்கே கலவரத்தை நிறுத்த முயலக் கூடாது?**

இலங்கையில் மட்டும் ஐம்பதாயிரத்துக்கு மேற்பட்ட பக்தர்கள் எனக்கு. அதில் இந்து, முஸ்லீம், சிங்கள, பௌத்த, கிறிஸ்துவ மக்கள் எல்லாரும் உண்டு... நான் ஸ்ரீலங்கா போவதாகத்தான் சொன்னேன். அங்கே நுவரலியாவில் எங்கள் ஆசிரமம் கூட இருக்கிறது... மத்திய அரசு இப்போது போக வேண்டாம் என்று தடுத்து விட்டது. குறிப்பாக, பாதுகாப்பு அமைச்சர் நரசிம்ம ராவ் தடுத்து விட்டார். அவர் என் பக்தர். இங்கே அடிக்கடி வருவார்.



குஜராத் புயல் அதிகம் தாக்காமல் தடுத்தது நீங்கள்தானாமே?

வேண்டுகோள் விடுத்தார்கள். தியானம் செய்தேன். புயல் கடந்து போய் விட்டது.

அப்படியானால் பங்களாதேஷ்ஸையும் புயலிலிருந்து காப்பாற்றியிருக்கக் கூடாதா?

என்னிடம் யார் வேண்டினார்கள்? யாராவது என்னிடம் முறையிட்டுக் கொண்டால் நான் அதன் பொருட்டு பிரார்த்தனை செய்வேன். யாரும் சொல்லவில்லையே!

சுவாமிகளின் தொண்டு மனித குல மேன்மைக்கும் நன்மைக்கும்தானே? அப்படி இருக்க, யார் உங்களிடம் வந்து சொல்ல வேண்டும் என்று எதிர்பார்க்கிறீர்கள்?

இப்போது பாருங்கள்: டி ஜி ஹள்ளியில் நான் தியானம் செய்ய வேண்டும் என்று எழுதிக் கேட்டுக் கொண்டார்கள். எத்தனை எதிர்ப்பு! எத்தனை ஆர்ப்பாட்டம்! நான் கேட்கிறேன்: "நான் பிரார்த்தனை செய்வதால் உங்களுக்கு என்ன இடைஞ்சல்? ஒரு மாதத்தில் மழை பெய்து நீர்த்தேக்கம் நிரம்பப் போகிறது, பாருங்கள்!" என்றேன். நீர்த்தேக்கம் அரசுக்கு சொந்தமான இடம். அவர்களாக அழைக்காமல் நான் அங்கே போய், சீடர்களுடன் தியானத்தில் அமர்ந்தால் என்னை அரெஸ்ட் செய்து கொண்டு போய் விடுவார்கள் அதனால் அழைப்போ, வேண்டுகோளோ கொடுத்தால் மட்டுமே நான் உதவுகிறேன். எனக்கு தினசரி இத்தனை உயரத்துக்கு (சைகையால் ஓரடி உயரத்துக்கு காண்பிக்கிறார்) கடிதங்கள் வருகின்றன. நான் அவர்களுக்காகப் பிரார்த்தனை செய்கிறேன். போன் மூலமும் உங்கள் வேண்டுகோளைச் சொல்லலாம்.

உங்கள் குரு யார்?

சாட்சாத் பரமேசுவரன்.

நரசிம்மையாவின் ஆட்கள் கறுப்புக் கொடி காண்பித்தார்களாமே?

ஆமாம். ஆனால் என்னுடன் இருந்தவர்கள் 'சாமியே சரணம் ஐயப்பா!' என்றவுடன் அடங்கிப் போய்விட்டார்கள். (உடம்பு குலுங்கச் சிரிக்கிறார்) ஏன், இவர்கள் மூட நம்பிக்கை எதிர்ப்பு பிரசாரத்தின் மூலம் தண்ணீர் கொண்டு வரட்டுமே? புயலைத் தடுத்து நிறுத்தட்டுமே?

முன்பு எப்போதாவது இப்படி பிரார்த்தனை மூலம் மழை தருவித்தீர்களா?

இரண்டு முறை. அப்போதெல்லாம் பத்திரிகைகள் எழுதவில்லை. இப்போது அடிபடுகிறது. அதனால் வீண் சச்சரவு கிளப்புகிறார்கள், ஒரு சாரார்.

சுவாமிகள் மந்திர சக்தி மூலம் பொருட்களை வரவழைப்பதுண்டா?

ஒரு யோகிக்கு ஏனய்யா இந்த வேலை எல்லாம்?

* * * * *

சிவபால யோகிக்கு 50 வயதாகிறது. பதினான்கு வயதிலேயே தியானம் செய்யத் தொடங்கி, பன்னிரண்டு வருடங்கள், நான்கு திக்கும் நோக்கித் தவம் செய்திருக்கிறாராம். விஷ ஜந்து, பாம்புக் கடிகள் அநேகமாம்.

"இந்தியாவில் 50 லட்சம் பக்தர்கள் எனக்கிருக்கிறார்கள்!" என்கிறார்.

"இது மழை சீசன் ஆயிற்றே. இப்போது மழை பெய்ய யோகி எதற்கு? என்று எல்லாரும் கேட்கிறார்களே?"

"இது சீசனாயிருந்தால் ஏன் ஒரு மாதமாக மழை பெய்யவில்லை? டி ஜி ஹள்ளி நிரம்பவில்லை? நானே ஒரு வாரம் பொறுத்திருந்து தான் தியானத்தைத் துவக்கினேன்!"

எப்படியோ, மழை கொட்டி நீர்த்தேக்கம் நிறைந்தால் சரி.

— சாருகேசி

---

மேலட்டையில்: ஜனனி

வண்ணப்படம்:

சரஸ்வதி சத்தியமூர்த்தி



# பிற்படுத்தப்பட்டோரிடம் பரிவு

ராஜாஜி வாழ்க்கை வரலாறு

ராஜ்மோகன் காந்தி

10

போராட்டங்கள் தொடங்கியபோது நாயக்கர் கைதானால் பிற எதிர்ப்பாளர்கள் மீது நடவடிக்கை எடுக்க அவசியமே இராது என்று ஸி. ஆர். கருதினார். ஆனால் அவர் மனம் மாறியது. ஈ.வெ.ரா. மீது நடவடிக்கை எடுக்கும் எண்ணம் கைவிடப்பட்டது. ஐந்து மாதங்கள் வரை ஈ.வெ.ரா. மீது எந்த நடவடிக்கையும் எடுக்கப்படவும் இல்லை. நவம்பர் 1938ல் அவர் விசாரணைக்கு உட்படுத்தப்பட்டார். எர்ஸ்கைன் பிரபுவின் கடிதப்படி பார்த்தால் இது அரசுத் தலைமைச் செயலகத்தில் நடந்த தவறு. "நானோ, பிரதம மந்திரியோ (ஸி. ஆர்) வழக்குத் தொடுப்பதற்குப் பிறப்பிக்கப்பட்ட உத்தரவுகளைப் பார்க்கவில்லை. அப்படி பார்த்திருந்தால் அதை அனுமதித்திருக்க மாட்டோம் என்பதில் சந்தேகமில்லை" என்று லின்லித்கோவுக்கு எழுதினார் எர்ஸ்கைன்.

இதற்குள் ஈ.வெ.ராவை ஜஸ்டிஸ் கட்சித் தலைவராக்குவது என்று திட்டமிட்டிருந்தார்கள். அவர் கைதாகி ஒருவருட சிறைத் தண்டனை பெற்றிருந்ததால் அவரைப் பின்பற்றுவோர் மத்தியில் மாபெரும் தியாகியின் அந்தஸ்துக்கு உயர்ந்திருந்தார். அவர் சகோதரர் ஆசிரியராய் இருந்து நடத்திய நாளிதழ். அவர் எத்தனை நாட்களாகச் சிறைவாசம் அனுபவித்து வருகிறார் என்பதை அன்றாடம் கொட்டை எழுத்துக்களில் பிரசுரித்தது. 'பெரியார்' ஆனார் ஈ.வெ.ரா. அவர் சிறையிலிருந்து எழுதியனுப்பிய அனல் கக்கும் 'பேச்சு' ஜஸ்டிஸ் கட்சி மாநாட்டில் படிக்கப்பட்டது. பிராம்மணர்களை 'கொசுக்கள்' 'மூட்டைப் பூச்சிகள்'; 'யூதர்கள்' என்றெல்லாம் அந்தப் பேச்சில் குறிப்பிட்டார் ஈ.வெ.ரா. 'புரோகிதர்களின் ஆதிக்கத்தை ஒழிப்பதானது ஜமீந்தாரி முறையை ஒழிப்பதைக் காட்டிலும் மிக அவசரமான, அவசியமான காரியம்' என்றார்.

ஈ.வெ.ரா. கைதானதால் ஜஸ்டிஸ்கட்சியின் மதிப்பு உயர்ந்து, பொது மக்களிடையே விழிப்புணர்ச்சி ஏற்பட்டுள்ளதாகக் கூறினார் குமாரராஜா முத்தையா செட்டியார். பன்னீர்ச்செல்வம் பிராம்மணர்களைத் தமிழர்களிடமிருந்து வேறுபடுத்தி, முன்னவர்களைத் 'தமிழ் நிலத்தில் புகுந்து விட்ட அன்னியர்கள்' என்று அழைத்தார். மாநாட்டு நிகழ்ச்சிகளை வெளியிட்ட ஹிந்து நாளிதழ் 'வெறுப்பு-வேதம்' (hymn of hate) என்று இவற்றை வர்ணித்தது.

சட்டசபையில் ஈ.வெ.ரா.வின் சிறைவாசம் குறித்தும் அவர் உடல்நிலை குறித்தும் எழுப்பப்பட்ட கேள்விகள் ஸி. ஆரை. சங்கடத்துக்கு உள்ளாக்கவில்லை. ஈ.வெ.ரா. தாமே விரும்பித் தேர்ந்தெடுக்கும் இடத்தில் தான் சிறை வைக்கப்பட வேண்டும் என்று பன்னீர்ச் செல்வம் ஸி. ஆரைக் கேட்டுக் கொண்டார். விவாதத்துக்கு ஸி. ஆர். பதில் அளித்தார்:

"பெல்லாரி சிறைக்கு அவரை (ஈ.வெ.ராவை) அனுப்புவது சரியல்ல என்று சொன்னார்கள். பன்னீர்ச் செல்வத்துக்கு பெல்லாரி சிறை பற்றித் தெரியாது. என் சொந்த அனுபவத்தில் கூறுகிறேன். அது ஒரு நல்ல சிறைச்சாலை. அரசியலில் நாயக்



களுக்கு நான் தீவிர எதிரியாய் இருந்தாலும் தனிப்பட்ட முறையில் அவருக்கு நெருங்கிய நண்பன். என்றால் இவர் நவரை அவருடைய நலனில் அக்கறை காட்டி அன்புடன் நடந்து கொள்கிறேன். இது அவருக்கே தெரியும். பெல்லாரி ஜெயிலுக்குப் போய் ராமசாமி நாயக்கரை நேரில் சந்தித்து, அவருடைய அபிப்பிராயத்தையே கேட்டறியுமாறு நான் பன்னீர்ச் செல்வத்துக்கு அழைப்பு விடுக்கிறேன்''.

மருத்துவ ஆலோசனைப்படி 1939 மே மாதம் விடுதலை செய்யப்பட்ட ஈ.வெ.ரா. பத்திரிகையாளர்களிடம் கூறினர்: ''என்னிடம் அசாதாரண அன்புடன் நடந்து கொண்டார்கள்''.

இடையில் ஆங்காங்கே, அவ்வப்போது சில கிளர்ச்சிகள் நடந்து ஒரு சிலர் கைதாகியிருந்த போதிலும் இதற்குள் ஹிந்தி எதிர்ப்பு இயக்கத்தின் வீரியம் வெகுவாகக் குறைந்து போய் விட்டிருந்தது.

* * * * *

ஜஸ்டிஸ் கட்சியினர் தங்கள் பெருமைக்குரிய சாதனைகளுள் ஒன்றாகக் கருதுவது 1935ல் எடுக்கப்பட்ட முடிவு. இதன்படி அரசு அலுவலகங்களில் பணியாற்றிய பிராமணர் அல்லாதாரின் எண்ணிக்கை விகிதம் கணிசமாக உயர்ந்திருந்தது. ஸி.ஆர். பதவி ஏற்றதும் ''இந்தக் கொள்கையை மாற்ற மாட்டேன்'' என்று உறுதி அளித்தார். இதற்கு இரு ஆண்டுகளுக்குப் பிறகு, ''நான் இங்கு இருக்கும் வரை எல்லா இனத்தவருக்கும் நியாயம் செய்வேன்'' என்றும் அவர் கூறினர்.

முஸ்லீம்கள் உள்பட கல்வி ரீதியிலோ சமூக ரீதியிலோ பிற்படுத்தப்பட்ட வகுப்பினருக்கும், ஜாதியினருக்கும் பல சலுகைகளை அளித்தது அவரது மந்திரி சபை. இவர்களுக்கு வயது வரம்புகள் உயர்த்தப்பட்டன, விண்ணப்பக் கட்டணங்கள் குறைக்கப்பட்டன அல்லது ரத்து செய்யப்பட்டன. குறைந்த கல்வித் தரம் இவர்கள் முன்னேற்றத்துக்குக் குறுக்கே நிற்காமல் கவனித்துக் கொள்ளப்பட்டது. இரண்டு மாகாண பணித் துறைகளைப் பற்றிப் பேசுகையில் ஸி.ஆர். சட்டமன்றத்தில் குறிப்பிட்டார்: ''பல விண்ணப்பதாரர்கள் 40க்கு பதில் 37 மதிப்பெண்கள் வாங்குவதால் வேலை வாய்ப்பை இழந்து விடுகின்றனர். ஆனல் அவரே முஸ்லீமாக இருந்தால் 35 மதிப்பெண்களே வாங்கியிருந்தால் கூட வேலையில் சேர்த்துக் கொள்ளப்படுகிறார். மேதகு அவையோர்கள் பள்ளிக் கூடத்தில் ஒரு சில மதிப்பெண்கள் பெற எவ்வளவு அரும்பாடுபட்டோம் என்பதை சிந்தித்துப் பார்த்தால் இது சின்னச் சலுகை அல்ல என்பதைப் புரிந்து கொள்வர்''.

சலுகைகள் அளிக்கப்பட வேண்டியதன் அவசியத்தை ஆமோதித்துத் தம் மந்திரி சபை இவ் விஷயத்தில் சாதித்துள்ளதை நியாயப்படுத்திப் பேசிய அந்த நேரத்தில் ஸி.ஆர். அவையினரிடம் சிந்தித்துப் பார்க்குமாறும் கேட்டுக் கொண்டார்: ''வயது வரம்பைக் கடந்திருந்தாலும் குறைந்த தகுதியே பெற்றிருந்தாலும் ஒரு குறிப்பிட்ட வகுப்பைச் சேர்ந்தவர் என்பதால் ஒருவருக்கு வேலை தரப்படுகின்றது. ஆனல் பல்கலைக் கழகங்களிலும், தொழில் முறைக் கல்லூரிகளிலும் அசாதாரண சாமர்த்தியம் காட்டி மதிப்பெண்கள் பெற்ற மாணவரோ வேலை வாய்ப்பை இழந்து முன்னவருக்காக விட்டுக் கொடுக்க வேண்டிய நிலையில் இருக்கிறார். இவரது நிலையில் உங்களை நிறுத்திப் பார்த்து ஒரு கணம் யோசியுங்கள்''.

ஸி. ஆர். மேலும் கூறினர்:

''இந்த வகுப்பு வாதங்களையே அவையின் முக்கிய பிரச்னையாக்குவது முற்றிலும் தவறு. இதைத் தவிர இங்கு வேறு பேச்சே இல்லாமல் போய்விட்டது. நாம் இவ் விஷயத்தை அனாவசியமாய்ப் பெரிது படுத்துகிறோம். தற்போது கூட்டுறவுச் சங்கங்களின் பதிவாளராய் இருப்பவர் ஒரு பிராம்மணர்; சமீப காலம் வரை ஒரு பிராமணர் இப் பதவியை வகிக்கவில்லை. அப்போது யாரேனும் அரசை வாழ்த்தினர்களா? இல்லையே? இப்போது ஒரு பிராம்மணர் அப் பதவியில் இருப்பதால் உடனே எதிர்ப்புத் தெரிவிக்கிறார்கள். பதிவுத் துறை இன்ஸ்பெக்டர் ஜெனரல் பிராம்மணர் அல்ல. இதை யாரேனும் குறிப்பிடுகிறார்களா? இல்லை. சிறைச்சாலையின் இன்ஸ்பெக்டர் ஜெனரல் பிராம்மணர் இல்லை. இதை யாரேனும் குறிப்பிடுகிறார்களா? இல்லை! போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரலும் பிராம்மணர் அல்ல; இதையும் யாரும் குறிப்பிடுவதில்லை; தொழிற்துறை இயக்குனர் பிராம்மணர் அல்ல. இதையும் யாரும் பாராட்ட முன்வரவில்லை. பொதுக் கல்வித் துறையின் டைரக்டர் ஜெனரலும் பிராம்மணர் அல்ல. இதை யாரேனும் குறிப்பிடுகிறார்களா? இல்லை! பிராம்மணர்களே எல்லா முக்கிய பதவிகளையும் அபகரித்துக் கொண்டு விடுகிறார்கள் என்று சொல்வது நியாயமே யல்ல''

(தொடரும்)

தமிழாக்கம்: **சீதாரவி**

---

**''நாலு இட்லியும், பேப்பர் தோசையும் கொண்டான்னு, நாலு இட்லியை மட்டும் மடிச்சுக் கொண்டு வந்திருக்கியே?''**

**''இட்லியை மடிச்சுக் கொண்டு வந்ததே அந்தப் பேப்பர் தோசையிலேதானே ஸார்!!''**

**— எல். ஜம்பு.**



Godrej தருகிறது

# பெஸ்டோ

கிலோ ரூ. 7.20.
இந்த விலையில் கிடைக்கக்-
கூடிய ஒரே உயர்ரக
ப்ளு டிடர்ஜெண்ட் பவுடர்








- **அதிக பளபளப்பு**—பெஸ்டோவின் விசேஷ ஃபார்முலா துணிகளுக்குத் தருகிறது அதிக பளபளப்பு, அதிக வெண்மை.
- **அதிக மென்மை**—கடுமையான வாஷிங் பவுடர்களைப் போல் பெஸ்டோ துணிகளுக்குக் கெடுதல் செய்வதில்லை. மேலும் உங்கள் கைகளை மென்மையாக வைக்கிறது.
- **அதிக வெண்மை**—துவைக்கத் துவைக்க துணிகள் பழுப்படைவதில்லை. ஆகவே வெளுக்க வெளுக்க வெண்மை நீடித்து நிலைக்கும்.

**பெஸ்டோ—ஒரு கிலோவுக்கு ரூ. 7.20 மட்டுமே!**
**உள்ளூர் வரிகள் தனி.**



Godrej
பெஸ்டோ
கோத்ரெஜ் பெஸ்டோ
ப்ளு டிடர்ஜெண்ட் பவுடர்

உயர் தரத்திற்கும் சிக்கனத்திற்கும்

CHAITRA-B-G-276 TAM R

# மௌனப் புயல்

**வாஸந்தி**

**10**

சற்றுத் தொலைவுக்கு வண்டியில் ஒருவரும் பேசவில்லை.

ரஞ்சனிக்குப் பஞ்சாபி புரியாது என்கிற நிச்சயத்துடன் அர்ஜுன் ஸிங் ருமாவிடம் சொன்னான்:

''இவர்களிடம் இதைப் பற்றி பேசிப் பிரயோஜனமில்லைதான். இவர்களுக்கு நம் உணர்ச்சிகள் புரியாது''.

அதை ஆமோதிப்பவளைப் போல், ருமா மௌனமாகத் தலையாட்டியது ரஞ்சனிக்கு வேதனையைத் தந்தது. மெல்லிய அதிர்ச்சி மின்சார அலையாய் நெஞ்சில் பாய்ந்தது.

ருமா என்னை வித்தியாசமாய் நினைக்கிறாள்! என் இனம் உன் இனம் என்று பிரித்து நினைக்க ஆரம்பித்துவிட்டாள்!

எத்தனை அபத்தம் இது! சம்பாஷணையை இயல்பாகத் தொடர முடியாத சங்கடத்தில் அவள் இருப்புக் கொள்ளாமல், வழுக்கிக் கொண்டு போன ஜன நெருக்கடியில்லாத விஸ்தாரமான தெருக்களைப் பார்த்தபடி தன்னுள் மூழ்கிய யோசனையுடன் அமர்ந்திருந்தாள். ருமா வேண்டுமென்று வரவழைத்துக் கொண்ட உற்சாகத்துடன் அரசியலையே தொடாமல் ஏதேதோ சம்பந்தமில்லாத விஷயங்களைப் பற்றிப் பேச ஆரம்பித்தாள். அவள் பேசியது எதுவுமே ரஞ்சனி கிரகிக்கவில்லை. அவளுக்கே கிரகித்ததா என்று ரஞ்சனிக்குச் சந்தேகமாக இருந்தது.

பேச்சின் திசையைத் திருப்ப அவள்,

''உங்கள் பிஸினஸ் எல்லாம் எப்படியிருக்கிறது, அர்ஜுன்?'' என்றாள்.

''ஆ, அது ஒரு சோகக் கதை!'' என்றான் அவன் மெல்லிய சீற்றத்துடன்.

''பஞ்சாபில்தான் என் குடும்பத்துக்கு அதிகமான வியாபார அலுவல்கள். அங்கேதான் ஒரு வருஷத்துக்கு மேலாகக் கலவரம் நடக்கிறதே! வியாபார உலகம் அங்கே ஸ்தம்பித்துக் கிடக்கிறது. இந்த மாதிரி நஷ்டத்தை அநுபவிச்சதேயில்லை. இருக்கிற நிலவரத்தைப் பார்த்தால் உங்களுடைய, என்னுடைய வாழ்நாளுக்குள் சரியாகும்னு தெரியல்லே...!''

அவள் ஜாக்கிரதையாகப் பதில் சொன்னாள்.

''இனிமேல் சரியாகலாம்...''

அவன் சிரித்தான் வாய்விட்டு.

பிறகு உக்ரமாகத் தலையசைத்தான்.

''நிலைமை இன்னும் மோசமாகப் போகிறது. நீங்கள் ஒரு ஜர்னலிஸ்ட், உங்களுக்கு ஏன் புரியவில்லை? பிந்திரன்வாலேயை அப்புறப்படுத்தினா பஞ்சாப் பிரச்னை தீர்ந்தது என்கிற மத்திய அரசின் குழந்தைத்தனமான



எண்ணம் எனக்கு வியப்பைத் தருகிறது. தீர்ந்திருக்கலாம். ரெண்டு வருஷம் முந்தியே செயல்பட்டிருந்தா. நௌ இட் இஸ் டூ லேட். பிந்திரன்வாலேயுடைய ஆவி அவனை விட பயங்கரமாக இருக்கப் போகிறது!''

இவன் சொல்வது உண்மைதான் என்கிற நினைப்பில் ரஞ்சனி மௌனமாக இருந்தாள்.

அவன் தொடர்ந்தான்.

''என்ன தெரியுமா? இப்பொழுது அவன் ஆவி கோவிலில் பிரதிஷ்டையாகிவிட்டது. மகானாக! 'ஷஹீத்' என்று நாங்கள் சொல்லுவோம். அவனை முன்பு ஆதரிக்காதவர்கள் இப்பொழுது ஆதரிக்கப் போகிறார்கள்!''

சற்று நேரத்திற்கு அவன் பேசாமல் ஓட்டினான். ரூபா கண்டிப்பாக இந்தப் பேச்சில் தானும் நுழையக் கூடாது என்று தீர்மானித்தவள் போல் வெளியில் ஒரு தீவிரத்துடன் பராக்கு பார்த்தாள்.

''பஞ்சாபுடைய தலையெழுத்து அது. நிம்மதியான வாழ்க்கை அதற்கு இல்லை. சரித்திர காலத்திலிருந்து அதன் சரித்திரமே ஒரு நிரந்தரப் போராட்டம்''.

இந்தத் தலைமுறையைச் சேர்ந்தவன் இப்படிப்பட்ட சுய பச்சாதாபத்தில் பேசுவது ரஞ்சனிக்கு வியப்பாக இருந்தது.

''இந்தப் போராட்டத்தில் ஹிந்துக்களுக்கும் அங்கே பங்கு உண்டு அர்ஜுன்! உண்மையில் அவர்களைப் பாதுகாக்கத்தான் சீக்கிய மதம் உருவாயிற்று!''

''ஓ, கமான்!'' என்றான் அவன், பொறுமையை இழக்காமல்.

''இந்த வாதம் எனக்கு அலுத்துவிட்டது. அந்தக் காரணத்துக்காகவே நாங்கள் மைனாரிட்டி வர்க்கமாகப் போனதை நீங்கள் மறுக்க முடியாது...''

''ப்ளீஸ் போதும்!'' என்றாள் ரூபா.

''இறங்க வேண்டிய இடம் வந்து விட்டது''.

பாரதிய வித்யா பவனின் வாசலில் வண்டியை நிறுத்தியதும், அர்ஜுன் ஸிங் ரஞ்சனியைப் பார்த்துச் சிநேகிதமாகச் சிரித்தான்.

''ஸாரி, அரசியலைத் தவிர வேறு எதையும் பேசவே இப்பொழுது எந்த சீக்கியனிடமும் சரக்கு இல்லை! ஐ நோ இட் இஸ் நாட் எ ப்ளெஸெண்ட் டாபிக்! ரூபாவிடம் காதல் பேச்சுப் பேசக் கூட எனக்கு மறந்து போய் விட்டது!'' என்று அவளைப் பார்த்துக் கண் சிமிட்டினான்.

ரூபாவின் முகம் சிவந்துபோயிற்று. ''அசடு வழியாதே அர்ஜுன்!'' என்று சிரித்தாள்.

''எப்பக் கல்யாணம்?'' என்றாள் ரஞ்சனி அவள் சிரிப்பில் கலந்தபடி.



அவன் வானை நோக்கிக் கையை விரித்தான்.

''அமிருத்ஸரில் நிலைமை சரியாக வேண்டும். கேள் ருமா! ரெஜிஸ்தர் கல்யாணம் செய்து கொண்டு கானடாவுக்குப் போய் விடலாம். அலை ஓயற வரை காத்திருக்க எனக்குப் பொறுமையில்லை''.

ரஞ்சனி எதிரில் இருக்கிற கூச்சம் இல்லாமல் அவன் ருமாவின் இடையைப் பற்றி இணைந்து நின்றான்.

அவள் காதருகில்,

''வா, இன்றைக்கே கல்யாணம் செய்து கொள்ளலாம்'' என்று பஞ்சாபியில் சொல்வது பார்வையை வேறு பக்கம் பதித்திருந்த ரஞ்சனிக்குக் கேட்டது. காரணம் புரியாமல் ஒரு பச்சாதாபம் ஏற்பட்டது.

ருமா மெல்லத் தன்னை விடுவித்துக் கொண்டாள்.

''என் தாத்தாவுக்கு இன்னொரு அதிர்ச்சியைக் கொடுக்க நான் சித்தமாயில்லை''.

அவர்கள் வகுப்பில் படிக்கும் மாணவர்கள் சிலர் அவர்களைப் பார்த்து 'ஹாய்!' என்றபடி விரைந்தார்கள்.

''நிதானமா வா, ருமா! வகுப்பு ஆரம்பிக்க இன்னும் பத்து நிமிஷம் இருக்கு!'' என்று சிரித்துக் கொண்டே ரஞ்சனி மற்றவர்களுடன் நகர்ந்தாள். அவர்களுடன் கல்லூரியில் படிக்கும் ராக்கேஷ் சர்மாவும் அவனுடைய தோழர்களும் மாடிப் படிக்கட்டில் நின்றிருந்தார்கள்.

''கங்கிராட்ஸ் ரஞ்சனி!'' என்றான் ராக்கேஷ். ''அந்த சர்தார்ஜியோட நீ பண்ணின இன்டர்வியூ 'ஏக்தம் டாப்ஸ்!' ''

''தாங்க்யூ!'' என்று அவள் புன்னகை புரிந்தாள், தான் இன்னும் பத்திரிகையைப் பார்க்கவில்லை என்கிற நமைச்சலுடன்.

''என்னமாய் உளறியிருக்கான் அவன், ஹிலேரியஸ் யார்!''

அவள் பதில் சொல்லாமல் நிற்கையில் திமுதிமுவென்று நாலைந்து மாணவிகள் மேலேயிருந்து இறங்கினார்கள்.

''ஃப்ரெஞ்ச் ஸ்டூடண்ட்ஸ் திரும்பிப்போங்கள்! நோ க்ளாஸ்! ப்ரொஃப் வரலே!''

''ஓ நோ!'' என்று உதட்டைப் பிதுக்கினாள் ஒருத்தி.

''ஒரு மணி நேரக் க்ளாஸுக்கு அரை மணி நேரம் பிரயாணம் பண்ணிண்டு வந்திருக்கேன்!''

''ஏன், ப்ரொஃப்புக்கு என்ன ஆச்சு?''

''ஸர்தார்ஜி ப்ரொஃப் துக்கம் காக்கிறார் நேர்கூரவி!''

''எதுக்கு?''

''டோண்ட் பீ ஸோ டம்ப் 'யார்', ரஞ்சனியைக் கேளு!''

ரஞ்சனி பதில் சொல்லவில்லை.

''அமிருத்ஸர் பொற்கோவிலில் ராணுவப் படை நுழைந்து விட்டது என்றால் சும்மாவா? நீ துக்கம் காக்க மாட்டியா?'' என்றான் ராக்கேஷ் ஒருத்தனிடம்.

''கண்டிப்பாக மாட்டேன். ஏன்னா நான் ஒரு சர்தார்ஜியில்லே!''

'கொல்'லென்று கிளம்பிய சிரிப்பில் கலந்து கொள்ளாமல் வாயைத் திறக்காத தீவிரத்துடன் இரண்டு சீக்கிய மாணவர்கள் நிற்பதை ரஞ்சனி கவனித்தாள்.

அங்கு வந்து நின்றிருந்த ருமாவின் கையைப் பிடித்து, ''வா, போகலாம்'' என்று இழுத்தபடி ரஞ்சனி பலத்த குரலில் சொன்னாள்.

''இது ஜோக் அடிக்கிற விஷயமில்லை ப்ளீஸ்!''

''கண்டிப்பா இல்லே, உன் பேட்டியிலே அந்த சர்தார்ஜி நம்மை முட்டாளாக்கப் பார்த்தாலும், கோவிலுக்குள்ளே வெளி நாட்டுக்காரன் கிட்டேந்து திருட்டுத் தனமா வாங்கின ஆயுதத்தை வெச்சுண்டு அரசோடு சண்டை போடறது அவன் மத தர்மமாம். அது தேசத் துரோகம் என்கிறது அவன் மண்டையிலே ஏறல்லேன்னு ராணுவந் தாலே அடக்கப் பார்த்தா அவனுக்கு அவமானமாம். எப்படியிருக்கு, லாஜிக்?''

''ஆப்ஸொல்யூட்லி ஸ்டுப்பிட் 'யார்'!''

''அதுக்காக நம்ப ப்ரொஃப் வகுப்பை பாய்காட் பண்றார்! ஜஸ்ட் இமாஜின்!''

''அவர்களில் வித்தியாசமில்லை ராக்கேஷ்! பேதமில்லாத சமூகம் அது! முதலில் சிக், பிறகுதான் இந்தியர்கள்!''

பேசாமல் இதுவரை நின்றிருந்த சீக்கிய மாணவர்கள் ஆக்ரோஷத்துடன் முன்னால் பாய்ந்தார்கள். ராக்கேஷையும், அவனுடைய சகாக்களையும் மொத்த ஆரம்பித்ததும் மாணவிகளும் சில மாணவர்களும் விரைந்து படியிறங்கிக் கலைந்து போனார்கள்.

''தாங்களே சமாதானமாகிப் போவார்கள் நீ வா'' என்று ருமாவை அணைத்தபடி ரஞ்சனி வகுப்பை நோக்கி நடந்தாள்.

''முட்டாள்கள், வடிகட்டின முட்டாள்கள்'' என்றாள் அடிக்குரலில்.

''அடிப்படை நாகரீகமே எல்லாருக்கும் போய் விட்டது ருமா!'' என்றாள் பெண்மையாக. ருமா தூரப் பார்வை பார்த்தாள்.

''மைனாரிட்டி வர்க்கத்துக்கு மெஜாரிட்டி வர்க்கம் மரியாதை காட்ட வேண்டிய அவசியம் இல்லே!''

''அர்ஜுன் ஸிங் சொல்றதை அப்படியே திருப்பிச் சொல்லாதே. உங்களுக்கெல்லாம் இப்படி ஒரு தாழ்வு மனப்பான்மை இருக்க வேண்டிய அவசியமே இல்லே!''

''நீ ஒரு கனவு காண்பவள் என்கிறதைத் தவிர உன் பேச்சிலே யதார்த்த உண்மையில்லை,'' என்றாள் ருமா அலுப்புடன்.

வகுப்பறைக்கு வந்ததும் மேற்கொண்டு எதுவும் பேசாமல் தங்கள் இருக்கையில் அமர்ந்தார்கள்.

ரஞ்சனிக்குப் பாடத்தில் கவனம் செல்லவில்லை. ருமாவிடம் தெரிந்த மாற்றம் நம்ப முடியாததாக இருந்தது. எதைப் பற்றியும் தீவிரமாகச் சிந்திக்காதவள் இப்பொழுது எப்படி இப்படிப் பேசுகிறாள்? அர்ஜுன் ஸிங்கின் சகவாசத்தினாலா? சீக்கிய ரத்தத்

தினாலா? ஓ, சிக்கிய ரத்தம் என்ன தனியானதா?

மைனாரிட்டி,

அவளுக்குஆச்சரியமாயிருந்ததுருமாவின் பேச்சு. ருமாவின் உறவுக்காரர்கள் எல்லாரும் பெரிய பதவியில் இருந்தார்கள். இவர்களுக்குக் கிடைத்திருக்கும் சலுகைகளும், பதவிகளும் வேறு எந்த சிறுபான்மையினருக்கும் கிடைத்ததில்லை. பிரிட்டிஷ் காலத்திலிருந்து செல்லம்கொடுக்கப்பட்டவர்கள்..

இவர்களுக்கு ஏன் இந்தத் தாழ்வு மனப்பான்மை?

இது ஒருபர்ஸிக்யூஷன் ஃபோபியா என்று அவள் நினைத்துக் கொண்டாள்.

எத்தனை அபத்தமான நிலைமை இது?

ஆனால் இது யதார்த்த உண்மை.

அவள் மிக சிரமப்பட்டுப் பாடத்தில் கவனம் செலுத்த முயன்றாள். ருமாவுக்கும் பாடத்தில் கவனமில்லை என்று புரிந்தது. அவளுடைய கோபத்துக்குப் பிரத்யேகக் காரணம் இருந்தது. பஞ்சாபின் அரசியல் நிலவரத்தினால் அவளுடைய திருமணம் ஒத்திப் போடப்படுகிறது. அவளுக்கு அந்த அர்ஜுன் ஸிங்கின் மேல் இருக்கும் காதல் அவளது பார்வையில் நிதர்சனமாகத் தெரிந்தது. அவள் ஒரு நல்ல மனைவியாக இருப்பாள் என்று நினைத்த ரஞ்சனி தனக்குள் சிரித்துக் கொண்டாள்.

வகுப்பு முடிந்து ஒரு வழியாக அவர்கள் வெளியே வந்து வழக்கம் போல் அமெரிக்கன் ஸென்டர் லைப்ரரியை நோக்கி நடந்தார்கள்.

ருமாவின் தோளில் கையைப் போட்டபடி ரஞ்சனி சிரித்துக் கொண்டே சொன்னாள்.

"ஐ ஸே, அர்ஜுன் ஸிங் சொன்ன மாதிரி, நீ ஏன் கல்யாணம் பண்ணிண்டு எங்கேயாவது வெளி நாடு போயிடக் கூடாது?"

ருமா சிரித்தாள்.

"அத்தனை சுலபமில்லை அது ரஞ்சனி! அவனுடைய குடும்பம் பெரிய குழப்பத்திலே இருக்கு. டில்லி பிஸினெஸ்ஸைப் பார்த்துக்க இவன்தான் இருக்கான். என்னுடைய எம்.ஏ. முடிஞ்சுடட்டும் என்கிறார் அப்பாவும்."

"நீ? நீ என்ன நினைக்கிறே?"

ருமா தூரப் பார்வை பார்த்துப் புன்னகை செய்தாள்.

"நான் காத்திருப்பேன்".

அவள் திடீரென்று நினைவு வந்தவள் போல் கேட்டாள்.

"ரஞ்சனி, உனக்கும் மன்மோஹன் ஸிங்குக்கும் இடையே இருக்கிற சினேகிதம் — ஹௌ ஸீரியஸ் இஸ் இட்?"

ரஞ்சனி திடுக்கிட்டு அவளைப் பார்த்தாள்.

"ஏன்?"

ருமா அவள் கையைத் தனதுக்குள் வைத்துக் கொண்டாள்.

"ஸீரியஸ்ஸாக்கிக்காதே. இப்ப இருக்கிற நிலைமையிலே அது உனக்கு நல்லதில்லை"

(தொடரும்)

## அருள்வாக்கு

தண்டோபாயத்திலும் அநேக தர்மங்கள் உண்டு.

**ஜயித்த**ராஜ்யம் ஜயிக்கப்பட்ட ராஜ்யத்தை நடத்தும் விதத்திலும் அர்த்தசாஸ்திரம் மிகவும் கௌரவமான பண்புகளை விதித்திருக்கிறது. ஒரு ராஜா வெளி ராஜ்யத்தை ஜயித்தபின் அதை முழுக்கவும் தன் ராஜ்யத்திலேயே சேர்த்துக் கொண்டுவிடக் கூடாது. அதன் 'இன்டிவிஜுவாலிடி' குன்றிவிடாதபடி அதைத் தனியாகவே விட்டிருக்க வேண்டும். 'அந்த ராஜ்ய ஜனங்களின் அன்புக்கும் மரியாதைக்கும் பாத்திரமாயிருக்கிறவர்களிடமே அதன் நிர்வாஹத்தை விட வேண்டும். அவர்களுடைய ஸமயாசாரம் என்னவோ கலாசாரம் என்னவோ, வாழ்க்கை முறையும் ஸம்பிரதாயங்களும் என்னவோ அவற்றுக்கெல்லாம் மாறுதலாக எதையும் திணிக்கவே கூடாது' என்று இப்போர்ப்பட்ட உத்தமமான கொள்கைகளை தர்ம சாஸ்திரம் மட்டுமின்றி, ரொம்பவும் பொல்லாதவராக வர்ணிக்கப்படுகிற சாணக்யரும் கூடத் தம்முடைய அர்த்த சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிறார்.

ராஜ்ய விஸ்தரிப்பின் மூலம் பலாத்காரமாகவும் அனேகவித நீசமான வசியங்களாலும், ஜயிக்கப்பட்ட ஜனங்களுக்குள் சாதுர்யமாக பேதங்களை உண்டு பண்ணுவதாலும் அவர்களைத் தங்கள் மதத்துக்கு இழுப்பது மற்ற நாட்டவரின் வழக்கம். இப்படி ஒரு ஜயித்த ராஜா ஜயிக்கப்பட்டவர்களை மத மாற்றம் செய்வதை நம் சாஸ்திரம் கொஞ்சம் கூட ஆதரிக்கவில்லை. யாஜ்ஞவல்க்ய ஸ்ம்ருதி,

"யஸ்மிந் தேசே ய ஆசாரோ வ்யவஹார: குல ஸ்திதி: |
ததைவ பரிபால்யோ(அ)ஸௌ யதா வசம் உபாகத: ||

என்கிறது. அதாவது ஜயித்த ராஜா வசப்படுத்திக் கொண்ட தேசத்தில் என்னென்ன ஆசார வ்யவஹாரங்களும் குல வழக்குகளும் இருக்கின்றனவோ அவற்றை அப்படியே தான் ரக்ஷித்துக் கொடுக்க வேண்டும் என்று தீர்மானமாகச் சொல்லியிருக்கிறது.

அர்த்தசாஸ்திரத்திலும் அந்தந்த தேசாசாரமே தழைக்கும்படியாக அதை ஜயித்த ராஜா செய்ய வேண்டும் என்று சொல்லியிருக்கிறது. ஜயித்த ராஜா அந்த ராஜ்யத்தின் முடிவான நிர்வாஹத்தைத் தன் கையில் வைத்துக்கொண்ட போதிலும் 'டொமினியன் ஸ்டேடஸ்' போல அதற்கும் ஓரளவு ஸ்வதந்திரம் தந்து, அந்த நாட்டவரின் அன்பையும் மதிப்பையும் பெற்ற அத்தேசத்தவரின் ஒருவரின் பொறுப்பிலேயே விட வேண்டுமென்று சொல்லியிருக்கிறது.

**—ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

# தீண்ட நினைத்தால் தீ

ஜரா

**பெண்கள் அன்பு காட்டினாலே அதைக் காதலாகவும், காமமாகவும் உருவகித்துக் கொண்டு அந்தப் போலித் தீயில் குளிர்காயும் கோணல் புத்திக்காரர்களை என்ன செய்தால் தகும்?**

கதவைத் தட்டப்போன கை அப்படியே நிற்கச் சற்று நிதானித்தாள் நித்யா. உள்ளிருந்து பேச்சுக்குரல்கள் காரசாரமாய்க் கேட்டன.

''இனிமே அவ வீட்டுக்கு நீ போறதைப் பாத்தேனோ அப்புறம் நான் மனுஷனா இருக்க மாட்டேன்''.

''எனக்கு இஷ்டமானவர்களை நான் பாப்பேன்; பேசுவேன்; அதை யாரும் தடுக்க முடியாது''.

''என்னடா சொன்னே ராஸ்கல். பிச்சுப் புடுவேன் பிச்சு! பாத்தியாடி உம் புள்ளையோட லட்சணத்தை! சொல்லிவை... அப்புறம்...''

''டேய் மகேஷ், அப்பா சொல்றதைக் கேளுடா. அக்கம்பக்கத்துல சிரிப்பா சிரிக்கறாங்க? பக்கத்து வீட்டுக்காரி என்ன உங்கூடப் பிறந்தவளாடா? அவ 'ஒரு மாதிரி'ன்னு எல்லாரும் பேசிக்கறாங்க... தெரியுமா?''

''சத்தம் போட்டுப் பேசாதம்மா. அவங்க காதுல விழுந்துடப் போகுது''.

அதற்கு மேல் அங்கு நிற்க நித்யாவுக்குத் திராணி இல்லை. மெல்லப் பின் வாங்கிப் பக்கத்து வீட்டுக்கு வந்தாள். இது அவளுக்குப் பெரிய இடி. தன்னைப் பற்றி இப்படி ஒரு விமர்சனத்தை மகேஷ் வீட்டிலிருந்து அவள் எதிர்பார்க்கவே இல்லை. லேசாக உடம்பு நடுங்கிற்று. கொஞ்சம் உட்கார்ந்தால் தேவலை போலிருந்தது. கதவைத் திறக்காமல் வாசற்படியிலேயே சரிந்து உட்கார்ந்தாள்.

இதைப் பாஸ்கர் கேள்விப்பட்டால் எப்படி இடிந்து போவான் என்பதை நினைக்கும் போதே அவளுக்கு நெஞ்சு படபடத்தது. எந்தக் காரணத்தைக் கொண்டும் அவனுக்குத் தெரிவிக்கக் கூடாது என்று தீர்மானித்துக் கொண்டாள்.

இன்னும் ஒரு மணி நேரத்தில் பாஸ்கர் வந்து விடுவான். அவன் மடியில் விழுந்து ஓவென்று அழுதால் மனசு பஞ்சாகி விடும் போல் தோன்றியது.

திடீரென்று நித்யா சிலிர்த்துக் கொண்டாள். அவள் ஏன் இப்படி அலட்டிக் கொள்ள வேண்டும். ஒரு மென்மையான இதயத்தைப் புரிந்து கொள்ளும் விசாலமான ஞானமில்லாமல் வார்த்தைகளால் குதறி எறியும் இந்தக் குரூர புத்திக்காரர்கள்தான் குமுறியழ வேண்டும்.

பரபரப்பான நகர வாழ்க்கைக்குப் பழகிப் போய் விட்டு, கிராமமும் அல்லாத, நகரமும் அல்லாத ஓர் இரண்டுங்கெட்டான் இடத்துக்குப் புகுந்த வீட்டுப் பெண்ணாக வந்த போது நித்யா நிறையத் தடுமாறிப் போனாள்.

இரண்டு மூன்று வருஷம் அங்குமிங்குமாகக் காலத்தை ஓட்டி விட்டுக் கடந்த ஒரு வருடமாகத்தான் கம்பெனிக்குப் பக்கத்திலிருக்கிறதே என்று இந்த இடத்துக்குக் குடி வந்தார்கள். ஷிப்ட் சூபர்வைசராக இருந்த பாஸ்கருக்கு, குழந்தையில்லாத தன் இளம் மனைவியைப் பாதுகாப்பாக விட்டுச் செல்ல ஒரு பொறுப்பான குடும்பம் பக்கத்தில் தேவைப்பட்டதால் இந்த வீட்டைத் தேர்ந்தெடுத்தான். எதிர்பார்த்ததைப் போலவே மகேஷின் குடும்பம் ஆரம்பத்தில் ரொம்பவும் அனுசரணையாகத்தான் இருந்தது.

பற்றுக்குறை பல்லைக் காட்டிக் கொண்டிருந்த அந்தப் பெரிய குடும்பத்துக்கு நித்யாவும் அவ்வப்போது உப்பு, புளியிலிருந்து ஊறுகாய் வரை உதவிக் கொண்டுதான் இருந்தாள்.

அவர்கள் வீட்டில் மூத்தவனான மகேஷ் ப்ளஸ்–டூ படித்துக் கொண்டிருந்தான். இயல்



பாகவே அவனுக்கு இருந்த கலகலப்பான சுபாவமும் கட்டித்தனமும், அறிவுக் கூர்மையும், அப்படி ஒரு தோழமைக்காகத் துடித்துக் கொண்டிருந்த நித்யாவை ஈர்த்தது.

மகேஷ் பெரும்பாலும் நித்யாவின் வீட்டில்தான் இருப்பான். புதிதாகப் படித்த புத்தகத்தில் இருந்து, புடவை செலக்ஷன் வரை அவர்களிடையே விவாதிப்பதற்கு நிறைய விஷயங்கள் இருந்தன. சிலசமயம் கடைக்குப் போவதில் இருந்து, காப்பி வைப்பது வரை மகேஷே வரிந்து கட்டிக் கொண்டு செய்யும் அளவுக்கு அவனுக்குச் சுதந்திரமும், உரிமையும் இருந்தன.

கோவில், சினிமா, திருவிழா எல்லா இடத்திலும் நித்யாவோடு மகேஷைப் பார்க்கலாம், சிலசமயங்களில் பாஸ்கர் இல்லாத போதும் கூட. ஆரம்பத்தில் இந்த நட்பு யாரையும் அவ்வளவாகப் பாதிக்கவில்லை. யாரும் ஆட்சேபணையும் எழுப்பவில்லை. மாறாக, "கூடப் பிறந்தவங்க கூட இப்படி இருக்க மாட்டாங்க" என்று சிலாகித்தவர்கள்தான் எல்லோரும்.

ஆனால் ஓர் இக்கட்டான சூழ்நிலையில், மகேஷின் வீட்டுக்குச் செய்து கொண்டிருந்த அற்ப உதவிகளை நிறுத்தப் போக, அன்றிலிருந்து ஆரம்பித்தது கஷ்டகாலம்!

வாஸ்தவத்தில் இப்படி அவர்கள் அண்டிப் பிழைப்பதை ஊக்குவிக்கக் கூடாது என்ற எண்ணத்தில்தான் நித்யா கொஞ்சம் கரடு முரடாக நடந்து கொண்டாள். ஆனால் அது இப்படி ஒரு அவச் சொல்லை அவள் மேல் திணிக்கும் அளவுக்கு விசுவரூபம் எடுக்கும் என்று நினைக்கவே இல்லை!



* * * * *

"ஏய் நித்யா, உன் பி.ஏ. வந்துட்டான். கவனி. அப்புறம் கோவிச்சுக்கப் போறான்!"

டென்னிஸ் ராக்கெட்டோடு கிளம்பிக் கொண்டிருந்த பாஸ்கர் உன்னை பார்த்துக் குரல் கொடுத்து விட்டு ஸ்கூட்டரைக் கிளப்பினான். மகேஷ் இளித்துக் கொண்டே அடுப்படிக்குப் போன போது நித்யா இறுக்கமான முகத்தோடு 'டிகாக்ஷன்' இறக்கிக் கொண்டிருந்தாள்.

"ம்... நித்யாம்மா ரொம்பப்ப கோவத்துல இருக்காப்ல இருக்கு! அதுல எனக்கும் தான் கொஞ்சம் கடன் குடுங்களேன்"

ரொம்ப 'ஸீரியஸ்'ாக முகத்தை வைத்துக் கொண்டு மகேஷ் கேட்டதும் நித்யா பதில் பேசாமல் மீண்டும் வேலையில் இலயித்தாள். கொஞ்ச நேரம் அவள் கவனத்தைத் திருப்ப ஏதேதோ சேஷ்டைகள் செய்து சோர்ந்து போன மகேஷ் கடைசியில் சோகமாகச் சுவரைப் பார்த்துப் பேசினான்.

"இதோ பாருங்க, நிறைய எதிர்ப்புகளுக்கு நடுவிலேயும் நான் உங்க பிரண்ட்ஷிப் வேணும்ங்கற வைராக்கியத்தோடு உங்க வீடு தேடி வர்றேன். ஆனா நீங்க வெளியுலக பிரக்


ஏம்மா! நானும் பலதடவை சொல்லிட்டேன். நல்ல ராக மாலிகா சேலையா வாங்கி கட்டும்னு. இப்படி மட்டமான சேலை யெல்லாம் சலவை பண்ணினு அப்படிதான் ஆகும்!
UMA FEATURES

ளைருமே இல்லாம ஏதோ ஒரு சின்ன கார ணத்துக்கு எல்லாம் பெரிசு படுத்தி இப்படி பேசாம இருந்தா எனக்கு ரொம்ப மனசு கஷ்டமா இருக்கு! நேத்து உங்க கர்சீப்பை எடுத்துக்கிட்டுப் போயிட்டேன்னுதானே கோவிச்சுகிட்டீங்க''.

நித்யா தன்னை மறந்து பெரிதாக சிரித் தாள்! பாவம். இவன் குழந்தை. இவன் என்ன செய்வான்! யாரோ சில வளர்ந்த விஷமிகள் விளைவிக்கும் குழப்பத்துக்கு இந்தக் குழந்தை எப்படி பொறுப்பாவான். இவன் நேசிக்கப்பட வேண்டியவன்! நிந்திக் கப்பட வேண்டியவனல்ல!

நித்யா திடீரென்று மகேஷின் முன் நெற்றி மயிரைப் பிடித்து உலுக்கி முதுகில் குத்தி, ''மடையா!'' என்று பல்லைக் கடித்தாள். மகேஷ் ''யம்மாடி'' என்று போலியாக அலறி, ''இதுதான் நித்யா'' என்று ஒப்புக் கொண் டான்.

இருவரும் கொஞ்ச நேரம் சிரித்துக் கொண்ட பின், மகேஷ் திடீரென்று நினைவு வந்தவனாக, ''ஜஸ்ட் எ மினிட்'' என் நண் பனைக் கூட்டிக்கிட்டு வந்தேன் — மறந்தே போயிட்டேன்'' என்று வெளியே ஓடினான்.

சிறிது நேரத்தில் மீசை அரும்பத் தொடங் கி இருந்த இன்னொரு வாலிபனோடு வீட்டுக் குள் வந்தான். நித்யாவுக்கு அவனை அறி முகப்படுத்தி வைத்தான். நித்யாவைப் பற்றி அவனிடம் ''ஓகோ, ஆகா'' என்று அரை மணி நேரம் புகழ்ந்து தள்ளினான்.

நித்யா செல்லமாக அவனைக் கடிந்து கொண்டு இருவருக்கும் காப்பி கலக்கிக் கொடுத்தாள். கொஞ்ச நேரம் மூவரும் அரட்டையில் மூழ்கி நேரத்தைக் கரைத் தனர்.

வாசலில் காய்கறிக் கூடைக்காரி குரல் கொடுக்கவே நித்யா 'எக்ஸ்க்யூஸ்' கேட்டு விட்டு எழுந்து போனாள். அவள் பேரத்தை முடித்துக் கொண்டு திரும்பும் போது இரு வரும் புழக்கடையில் நின்று கொண்டு 'திருட்டு தம்' அடித்துக் கொண்டிருந்தனர். நித்யா கண்டு கொள்ளாதவளாகப் புன்னகை செய்தபடி அடுப்புக் காரியத்தைக் கவனிக்க ஆரம்பித்தாள்.

இடையில் ஒரு முறை அவள் குளியலறை பக்கம் போன போது தான் அந்த இடி தாக்கிய அனுபவத்துக்கு ஆளானாள். குளிய லறை கதவுக்கு அப்பால், புழக்கடையில் நின்று கொண்டு மகேஷும், அவன் நண் பனும் தனிவாகப் பேசிக் கொண்டிருந்த வாசகங்கள்! யம்மாடி! வாசகங்கள் அல்ல அவை! வாரி இறைக்கப்பட்ட நெருப்புத் துண்டங்கள்! விஷம் தோய்க்கப்பட்ட கூரிய அம்புகள்! இன்று அடுத்தடுத்து நடக்கும் இந்த எதிர்பாராத ஓட்டுக் கேட்கும் அனு பவங்கள் ஒரு சரித்திர சிறப்பு வாய்ந்த நிகழ்ச் சியைப் போல நெஞ்சம் நடுங்க வைத்தது. மகேஷின் நண்பன் கேட்டான்:

''மேடம் பக்சி! ஆளு 'கும்மு' இருக்கா! [illegible]

மகேஷ் கொஞ்சம் கூட கூசாமல் சொன் னான். மனிதத் தன்மையை மண் போட்டு மூடிவிட்டுச் சர்வ சாதாரணமாகச் சொன்னான்.

''இவளை இன்னும் விட்டு வச்சிருப் பேன்னு நினைச்சே! பாக்கி இல்லே. ஐயா மேல இவளுக்குத் தனி க்ரேஸ் — நித்யான்னு போதும். பேசாம நெஞ்சில் சாய்ஞ்சிடுவா! ஏற்கனவே அஞ்சாறு தடவை... ஆச்சு! இது கூட இல்லேன்னு இவ பின்னால சுத்தறதுக்கு எனக்கென்ன பைத்தியமா!''

மிகவும் மெல்லிய குரலில் மகேஷ் சொல்லச் சொல்ல, பழுக்கக் காய்ச்சிய ஈயம் பாய்ந்தது போல செவிகள் பற்றி எரிய நித்யா நட்டு வைத்த மரமானாள். கால்கள் தாமாக நடுங்கி பூமி நழுவுவதைப் போல் இருந்தது. எப்படிப்பட்ட பொய்! அமிலத் தில் குளிப்பாட்டியது போல... அப்பட்ட மான பச்சைப் பொய்!

இந்த அயோக்கியன் மேல் இவள் காட்டிய அன்பை பாசத்தை புனிதமான ஸ்நேகத்தைக் கொச்சைப் படுத்திப் பார்ப்பதில் இவனுக் கென்ன அப்படி ஒரு ஆத்ம திருப்தி?

பெண்கள் அன்பு காட்டினாலே, அதைக் காதலாகவும், காமமாகவும் உருவகித்துக் கொண்டு அந்தப் போலித் தீயில் குளிர் காயும் இந்தக் கோணல் புத்தி ஆண்களை என்ன செய்தால் தகும்?

நித்யா தகிக்கும் கோபத்தோடு புறக் கடைக் கதவைத் திறந்து அவர்களைப் பார்த் தாள். ''ஒன் மினிட் மகேஷ்'' என்று விரல் களைச் சொடுக்கி அவனை அருகில் அழைத் தாள். அவன் தயங்கியபடி நெருங்கியதும் பலம் கொண்ட மட்டும் ஓங்கி அவன் கன்னத் தில் அறைந்தாள்.

''ராஸ்கல்! — இன்னொரு தரம் என் முகத்துல முழிச்சே, செருப்பு பிஞ்சி போயிடும்''.

# உங்களுக்குத் தேவை இவைதான்:
# சாந்தமுள்ள மனநிம்மதி
# சக்தியுள்ள உணவுகள்.



ஆம். குழந்தைக்கு பாலூட்டத் தயாராகும் நீங்கள் கவனத்தில்கொள்ள வேண்டியது மிக எளிய விஷயம்; மன நிம்மதியோடு பாலூட்டுங்கள். அதிகமாக பால் சுரப்பதற்கு உதவிடும் உணவுகள் அனைத்தையும் உண்ணுங்கள்.

### கவலைப்படுவதை நிறுத்துங்கள்

கவலைப்படுவது உங்களுக்குத் தீங்கு விளைவிக்கும்—என்றால், உங்கள் குழந்தைக்கும்தான். கவலைப்படுவதால் உங்களுக்கு நோய் ஏற்பட்டு பால் வற்றிவிடும்.

நோய்ப் பிரச்சனைகள் எதுவும் உங்களுக்கு இருந்தால், அலட்சியமாய் இருந்து விடாதீர்கள்; டாக்டரிடம் செல்லுங்கள் அவரை உங்கள் மூத்த நண்பராய்க் கருதுங்கள்.

### ஆரோக்கியமான உணவைத் துவக்குங்கள்:

உடலுக்கு உகந்த ஆரோக்கிய உணவு எது என்பதை அறிந்திட பிரமாதமாக நூல் நிலையத்திற்குச் சென்று புத்தகங்களைப் புரட்டுவதோ, கலோரிப் பட்டியலைப் பார்ப்பதோ அவசியமில்லை. உங்களுக்குத் தேவை பொது அறிவுதான். உதாரணமாக, குழந்தையின் வளர்ச்சிக்கு புரதம் அதிக அளவில் தேவைப்பட்டால் அதை வழங்கக்கூடியவை, உடல் வளர்ச்சியை உருவாக்கும் பால், முட்டை, மாமிசம் ஆகும். அவற்றை நீங்கள் உண்ண வேண்டும்; புரதம் செறிந்த உணவுப் பானங்களை அருந்த வேண்டும். புரதச்சத்தை அதிக அளவில் நீங்கள் பெறுவது, உங்கள் குழந்தையும் பெறுவதாகும்—உங்களிடமிருந்து. மிகவும் முக்கியம் என்னவென்றால் கார்போஹைட்ரேட்டுகள் அதிகம் கூடாது. காரணம் அது பாலின் தரம் மற்றும் அளவைப் பாதிக்கும்.

இதுபோன்ற எளிய நடவடிக்கைகள்கூட, உங்கள் குழந்தை முறையாக முலைப்பால் குடித்திட உதவும். உடல் நிலை மோசமாக பாதிக்கப்பட்டிருக்கும் பட்சத்தில் உங்கள் குழந்தைக்கு நீங்கள் மாற்றுப்பால் தேர்ந்தெடுக்க வேண்டும்.

### ஸ்ப்ரே ட்ரை செய்யப்பட்ட அமுல்ஸ்ப்ரே

அமுல்ஸ்ப்ரே—நன்கு சமச்சீராக கலக்கப்பட்ட சத்துக்களுடன் கூடியது—பிரதம தரமுள்ள புரதம், ஜீரணிக்க எளிதான கொழுப்பு மற்றும் கார்போஹைட்ரேட்டுகள், சரியாகக் கலந்துள்ள வைட்டமின்கள் மற்றும் தாதுக்கள்.

ஏற்கனவே கொதிக்க வைத்த வெதுவெதுப்பான நீரில் அதைக் கலப்பது எளிது. முன்னாலேயே அதை பசைபோல் தயாரிக்கவேண்டிய அவசியம் இல்லை.

### சிக்கனமானது

டின்னில் அடைக்கப்பட்டுள்ள குழந்தை உணவுகளில் மிகவும் சிக்கனமானது, அமுல் ஸ்ப்ரே. காரணம், அது இந்தியாவின் 'வெண்மைப் புரட்சிக்கு' முன்னோடியான நவீன பால் நிறுவனத்தால் தயாரிக்கப்பட்டது.

ஆனால் கொதிக்க வைத்த நீர், சுகாதார முறையில் கிருமி நீக்கம் செய்யப்பட்ட பாத்திரங்கள் மற்றும் பால் புட்டிகள் உபயோகித்தலை உறுதி செய்து கொள்ளுங்கள். பால் கலக்கப்படும்போது அதிகம் நீராகி விடுவதை தவிர்ப்பதற்கும், போதுமான ஊட்டச் சத்துக்களை உறுதி செய்வதற்கும் டின்மீது குறிப்பிட்டுள்ள வழிமுறைகளை கவனமாக பின்பற்றுக.




# அமுல்ஸ்ப்ரே

**தாய்ப்பாலுக்கு அடுத்ததுதான்.**

### இலவசம்! அமுல் வளர்ப்பு வழி—

இதில் அடங்கியுள்ளவை: கருத்தரித்தல், பேறு காலத்திற்கு முன் கவனிப்பு, பிரசவம், தாய்ப்பால் ஊட்டுதல், வெளியில் கிடைக்கும் உணவு வகைகள், லேசான தானிய உணவு தருதல், குழந்தையின் அன்றாடக் கடன்கள், குழந்தையின் வளர்ச்சி, நோய்த் தடுப்பு, முதலுதவி, பொதுவான நோய்கள், நோயுற்ற குழந்தையைப் பாதுகாத்தல் தமிழ், இந்தி, மராத்தி, குஜராத்தி, ஆங்கிலம், தெலுங்கு மற்றும் மலையாள மொழிகளில்.

உங்கள் பெயர் மற்றும் முகவரியுடன் ரூ. 1.25 தபால் தலை ஒட்டி எழுதுக இம் முகவரிக்கு: தபால் பெட்டி எண் 10124, பம்பாய் 400 001.



விற்பனைக்கு விடுப்போர்:
குஜராத் கோ-ஆப்பரேடிவ் மில்க் மார்க்கெட்டிங் ஃபெடரேஷன் லிமிடெட்,
தபால் பெட்டி எண் 10, ஆனந்த் 388 001, குஜராத் மாநிலம்.

ASP/AS-TAM7/83

# இதுக்கு ஒரு முடிவு கட்டியாகணும்

**வினோதானந்த்**

"மனுஷனுக்கு விட்டில நிம்மதி இல்லே. இங்கே வந்தா ஏதோ ஒரு விதத்துல ஆறுதல் கிடைக்கிறதுன்னு வரார். அதைத் தடுத்து நிறுத்தி ஒரு அப்பாவி மனுசரின் மனசிலே ஏற்பட்டிருக்கிற ரணத்தைக் கீறி விடணுமா?"

நாகசாமி!

இதே தெருவின் கடைசியில் இருக்கும் விட்டில் நான்கு குடித்தனங்களுக்கு மத்தியில் ஒரு குடித்தனமாய் மனைவி, இரண்டு பிள்ளைகள், இரண்டு பெண்கள் இவர்களிடம் அல்லாடிக் கொண்டிருக்கும் மனிதர்.

உத்தியோகத்திலிருந்து ஓய்வுப் பெற்றுப் பத்து மாதங்கள் ஆகின்றன. வந்த பணத்தில் இருந்த சொற்ப கடனை அடைத்துவிட்டு, மிச்சத்தை அவர்களிடம் ஒப்படைத்துவிட்டு இப்போது சிங்கிள் டீக்கும், வெற்றிலை பாக்குக்கும் வெளி மனிதரை எதிர்பார்க்கும் பாவப்பட்ட பிறவி.

ஒவ்வொரு மாதம் முடிந்ததும் பேயாய் உழைத்த உழைப்புக்குக் கிடைத்த ஊதியத்தை விட்டில் கொண்டு வந்து கொட்டிக் கொண்டிருக்கும் வரைதான் ஒருவனுக்கு மதிப்பென்றால் அதை எண்ணி வேதனைப் படாமல் இருப்பது என்பது மனிதாபிமானமற்றவர்களுக்குத்தான் சாத்தியமாகக் கூடியது.

ஆறு மாதங்களுக்கு முன் ஏதோ ஒரு சந்தர்ப்பத்தில் ஏற்பட்ட அறிமுகம். வீட்டுக்கு வர ஆரம்பித்தார். காலை மாலை என்று நினைக்கும் நேரத்தில் வருவார். அரை மணி நேரம் ஒரு மணி நேரம் செய்தித் தாளில் மூழ்கியிருப்பார். ஓர் அற்ப ஜந்துவைப் போல் குடும்பத்தவரால் தான் கருதப்படுவதைக் கண்கலங்கச் சொல்வார்.

சம்பாதிக்கிற வரையில் எல்லாம் கிடைத்துக் கொண்டிருந்தது. தன் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ள முடிந்தது.

இப்போது எல்லாமே உல்டா. அவரது விட்டவர்களைப் பொறுத்த வரையில், தண்டச் சோறு என்று வெளிப்படையாகச் சொல்லா விட்டாலும் அவர் தங்களுக்கு ஒரு சுமையாக இருப்பதாக அவர்கள் கருதுவது பளிச்சென்று அவருக்குத் தெரிகிறது.

* * * * *

தெரிந்தவர்கள் நாலைந்து போ விட்டில் நாகசாமி பூரண பாத்தியதையோடு நுழைந்து 'சும்மா வந்தேன்' என்று தொடங்குவார். எதையும் நேரிடையாகக் கேட்க மாட்டார்.

"தலைவலி மண்டையைப் பிளக்கிறது. சூடா அரை கப் காப்பி குடித்தால் பட்டுன்னு நின்னுடும்..."

"ஏகாதசியாச்சே, என்ன பலகாரம்? இட்லியா, தோசையா, உப்புமாவா...?"

வாரத்தில் இரண்டு மூன்று நாட்கள் காப்பி. செய்யும் சிற்றுண்டிகளில் பங்கு. ஆனால் தினமும் வந்து செய்தித்தாள் படிக்காமல் மட்டும் போவதில்லை.

என்னவனுக்கும், பிள்ளை, பெண்ணுக்கும் திடீரென்று ஓர் ஆவேசம் பிறந்திருக்கிறது.

"இது என்ன மனுஷர் கழுகு மாதிரி வந்து உட்கார்ந்திடறார்? இங்கே என்ன கொட்டியா கிடக்கிறது...?" என்று என் மனைவி நேற்று முன்னிரவில் ஆரம்பித்தாள். அவளுடைய அந்தப் பாட்டுக்கு பெண் வயலின் வாசித்தாள். பையன் மிருதங்கம்!

"காலையில பேப்பரை ஏதோ காசு போட்டு வாங்கற மாதிரி எடுத்து வச்சுக்கறார். எனக்குப் படிக்கக் கிடைக்கமாட்டேங்கறது..." என்றான் பையன்.

"வெங்காயம், முருங்கைக்காயின்னு வாசனை மூக்கைத் துளைக்காம முதுகையா துளைக்கும்? ஓசிப் பண்டாரம். நன்னா வாய் ஜாலக்கா பேசக் கத்துண்டிருக்கார்..."

---

ரஷ்யாவில் எல்லா இடங்களிலும் தேடிப் பார்த்து விட்டார்கள் — நூல் நிலையங்கள், கல்லூரிகள், மியூஸியங்கள், அரசாங்க அலுவலகங்கள் — எங்குமே கிடைக்கவில்லை. கடைசியில், அமெரிக்காவில் ஸான்ஃபோர்டு யூனிவர்ஸிடியில் இருப்பதாகத் தெரிந்தது. உடனே அந்த யூனிவர்ஸிடிக்கு எழுதி ஒரு மைக்ரோ பிலிம் பிரதியை நன்றியுடன் பெற்றுக் கொண்டது ரஷ்ய அரசு.

அவர்கள் தேடியது — மார்ச் 5, 1917—ல் வெளியான 'ப்ராவ்டா' பத்திரிகையின் முதல் இதழ்.

—எம். சிவசுப்ரமணியன்.



என்றாள் பெண்.

"அதைக் கொடுங்கோ, இதை கொடுங்கோன்னு உங்களை அவர் கேட்கிறாரா? இல்லையே! இஷ்டமிருந்தால் கொடுக்கப் போறேன். இல்லேன்னா கண்டும் காணாம இருக்கப் போறேன். இதுல சங்கடப்படவோ கோபப்படவோ என்ன இருக்கு?

"மனுஷனுக்கு வீட்டிலே நிம்மதியில்லே. இங்கே வந்தா ஏதோ ஒரு விதத்துல ஆறுதல் கிடைக்கிறதுன்னு வரார். அதைத் தடுத்து நிறுத்தி ஒரு அப்பாவி மனுஷனின் மனசுல ஏற்பட்டிருக்கிற ரணத்தைக் கீறிவிடணுமா?"

"அவரைப் போலக் கஷ்டப்படறவா லட்சக் கணக்கிலே கோடிக் கணக்கில இருக்கா. எல்லாரையும் வாசல்ல வந்து வரிசையா நிக்கச் சொல்லுங்கோ. ஐஸ்வர்யம்

இங்கே பொங்கி வழியறதோல்லியோ? அப்படியே வச்சிருந்தா பூசணம் பிடிச்சுடப் போறது...!''

''இப்ப என்ன சொல்லவரே?'' என்று கேட்டேன்.

''நாளைக்கு அவர் இங்கே வந்தா பேப்பரைக் கண்ல காட்டாதிங்கோ. எனக்குத் தலைமேல வேலையிருக்கு. போயிட்டு அப்புறமா வாங்கோன்னு உள்ளர்த்தம் புரியற மாதிரி நாசுக்கா சுத்தரிச்சு விடுங்கோ...''

''உள்ளர்த்தமாவது, வெளி அர்த்தமாவது? சும்மா சும்மா இங்கே வந்து தொந்திரவு கொடுக்காதிங்கன்னு டைரக்டா சொல்லிடப் போறேன்...'' என்றான் பையன்.

''கரெக்ட்...'' என்றாள் பெண்.

இறுதியாக அவர்கள் ஒரு தீர்மானத்தை முன் மொழிந்து வழி மொழிந்து விட்ட பிறகு என் அபிப்ராயம் அங்கே பொத்தல் விழுந்த ரூபாய் நோட்டு.

நாளைக்கு நான் வேலையிலிருந்து ரிடையரானால் எனக்கும் இதே கதிதானு?

* * * * *

நாகசாமி வரும் நேரம்.

கையில் ஆயுதம் ஏதும் இல்லாமல் அறப்போர் நடத்த என் மனைவி, பிள்ளை, பெண் மூவரும் காத்திருந்தார்கள். நாகசாமிக்குக் கிடைக்கப் போகும் மரியாதையை நினைத்து வேதனைப்பட்டேன்.

அப்போது—

கோபால் ஓடி வந்தான். ஆடிட்டர் ராமசுப்பிரமணியத்தின் பையன்.

''மாமா! கடைத் தெருவில ஏகக் கூட்டம்...'' என்றான்.

எனக்கு ஒன்றும் புரியவில்லை.

''என்னடா சொல்றே...?'' என்று கேட்டேன்.

''கோடி வீட்டு நாகசாமி இருக்கார் இல்லையா? அவர் எதுக்கோ அந்தப் பக்கமா போயிருக்கார். ஒரு லாரி அவர் மேலே ஏறிடுத்து. ஆள் அதே எடத்துல குளோஸ்...!'

மூச்சிரைக்க விடுவிடென சொல்லி விட்டுப் போனான்.

''இதுக்கு ஒரு முடிவு கட்டியாகணும்னு நேத்து எல்லாருமாச் சேர்ந்து தீர்மானம் போட்டேளே, அந்தச் சிரமத்தை உங்களுக்கு வைக்காம அந்த மனுஷன் தானே முடிச்சு வச்சிட்டார். இப்ப உங்களுக்கெல்லாம் திருப்திதானே? போய்ப் பாயசம் வச்சுச் சாப்பிடுங்கோ...''

எனக்கு ஏன் இவ்வளவு கோபம் வருகிறது? ஏன் இப்படி வெறி பிடித்தாற் போல் கத்துகிறேன்?

* * * * *

போஸ்ட்மார்ட்டம் அது இது எல்லாச் சடங்கும் முடிந்து உடலை வீட்டுக்குக் கொண்டு வந்தார்கள். வீடு கொள்ளாத கூட்டம். உள்ளே பெண்களின் ஓலம்.

என் மனைவியும் அங்கே இருந்தாள்!



# அறிமுகப்படுத்துகிறோம்!

# புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர்

## அது வேர்க்குருவிற்கு விரைவாக நிவாரணமளிப்பது மட்டுமல்ல, உண்மையிலேயே அதைத் தடுத்திட உதவுகிறது.

**நீங்கள் வேர்க்குருவைத் தடுக்க முடியும்போது அது தாக்கும்வரை ஏன் காத்திருக்க வேண்டும்?**

இப்போது, உங்கள் வேர்க்குரு பிரச்சினையைக் கட்டுப்படுத்த இன்னும் மிகத் தீவிரமான வழி—புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர். அது வேர்க்குருவிற்கு விரைவாக நிவாரண மளிப்பது மட்டுமல்ல உண்மையிலேயே அதை தடுத்திட உதவுகிறது.

**புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர் ஏன் மிகவும் தீவிரமானது?**

உங்களுக்கு அதிகமாக வியர்க்கும். அந்த வியர்வை உங்கள் சருமத்தில் அதிக நேரம் தங்கியிருக்கும்போது, வேர்க்குருவின் தாக்குதலுக்கு நீங்கள் ஆளாகிறீர்கள். அதற்காகத்தான் புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர் மிகவும் தீவிரமானதாகத் தயாரிக்கப்பட்டுள்ளது. வியர்வையை நன்றாகவும் விரைவாகவும் உறிஞ்சும் வண்ணம் விசேஷமாகத் தயாரிக்கப்பட்டுள்ளது அது—உங்கள் சருமத்தில் பாக்டீரியாக்கள் பெருகுவதைத் தடுக்கிறது—ஆகவே வேர்க்குரு இல்லை. எரிச்சல் இல்லை. கசகசப்பு இல்லை. அப்பாடா என்ன நிவாரணம்! அதற்கும்மேல் புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர், இப்போது மகிழ்ச்சிதரும் புதிய நறுமணமும்* கொண்டுள்ளது.

வரும் கோடையில் வேர்க்குரு தாக்கும்வரை காத்திருக்காதீர்கள். விரைந்து வாங்கிடுங்கள் ஒரு பேக் புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர். வேர்க்குருவை நீங்கள் தடுக்க முடியும்போது, வேர்க்குருவால் ஏன் சிரமப்பட வேண்டும்?

விசேஷமாகத் தயாரிக்கப்பட்டுள்ளது. இவ்விதம் செயல்படுகிறது.



வியர்வையை நன்றாகவும் விரைவாகவும் உறிஞ்சுகிறது.



சருமத்தில் பாக்டீரியாக்கள் பெருகுவதைத் தடுப்பதற்கான விசேஷ மருந்துக் கலவை கொண்டது.



சருமத்தை குளிர்ச்சியாகவும் புத்தம் புதுமையோடும் வைத்துக் கொள்கிறது. அதன் இதமான செயல்.




*சந்தன மணத்திலும் கிடைக்கிறது.

Johnson & Johnson

OBM-4181 TAM

முற்றும் புதிய கோலங்களில்
என்றும் அழியாக்
கலைவண்ணங்கள் !





லக்ஷ்மி சில்க் ஹவுஸுக்கு விஜயம்
செய்தாலன்றி உங்கள் பட்டுப்
புடவைகளின் தேர்வு நிறைவு
பெறுவதில்லை
வாருங்கள். 30.000க்கும்
மேலான அரிய படைப்புகளி
லிருந்து தேர்ந்தெடுங்கள்.

Silk House

# "மிலாட் ராகுகாலத்தில் ஆரம்பிக்கட்டுமா?"

ஒரு சுவாரஸ்யமான, பழுத்த வழக்கறிஞரைச் சந்திக்கிறோம், இங்கு.



1962ல்சிதம்பரம்தொகுதியின்எம்.பி. ஆக இருந்தவர் கோபாலகிருஷ்ணன். ஒரு தகராறில் தமது வேலைக்காரனைச் சுட்டுக் கொன்று கொள்ளிடக் கரையில் புதைத்து விட்டதாகக் குற்றம் சாட்டப்பட்டு, தென்னாற்காடு மாவட்ட செஷன்ஸ் நீதிபதியால், ஆயுள் தண்டனை அளிக்கப்பட்டார். வழக்கு ஹைகோர்ட்டுக்கு வந்தது. கோபாலகிருஷ்ணன் சார்பில் ஆஜரானார் கோவிந்த் சுவாமிநாதன். பிரபல கிரிமினல் வழக்கறிஞர் வி.எல். எத்திராஜ் அவர்களின் ஜூனியராக இருந்ததனால் கிரிமினல் வழக்கு என்றால் சுவாமிநாதன் அவர்களுக்கு அல்வாத் துண்டு மாதிரி. குற்றம் சாட்டப்பட்டவர் உபயோகித்த துப்பாக்கி கோர்ட்டில் பரிசீலனைக்கு வந்தது. வாதாடிக் கொண்டிருந்த சுவாமிநாதன் அந்தத்துப்பாக்கியைக்கையில் எடுத்துப் பரிசீலித்துவிட்டு, நீதிபதியிடம் தந்தார். அதை நீதிபதி வாங்கியதுதான் தாமதம், பல்வேறு பகுதிகளாகப் பிரிந்து விழுந்தது. நீதிபதி அதிர்ச்சி அடைந்தார். "மிலாட் இந்த துப்பாக்கியை உபயோகித்துச் சுட முடியுமா?" என்றார் சுவாமிநாதன். கோபாலகிருஷ்ணன் விடுதலையானார்.

## பரபரப்பூட்டிய அர்ச்சகர் கேஸ்

பரம்பரை அர்ச்சகர்கள் கேஸ் கோவிந்த் சுவாமிநாதனால் மறக்க முடியாதது. கருணாநிதி முதல்வராக இருந்த காலத்தில் ஒரு சட்டம் கொண்டு வரப்பட்டது. சட்ட நோக்கத்தில் (Statement of Objects) மந்திரங்கள் தெரிந்த எவரும் அர்ச்சகராக வரலாம் என்றும், ஆனால் சட்ட விதிகளின் படி தகுதி, திறமை பார்த்து நிர்வாக அதிகாரி அர்ச்சகரைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்றும் குறிப்பிடப்பட்டிருந்தது. இந்தச் சட்டத்தை தொடர்ந்து 68 ரிட் மனுக்கள் சுப்ரீம் கோர்ட்டில் தாக்கல் செய்யப்பட்டன. அர்ச்சகர்கள் சார்பில் பிரபலமான பல வழக்கறிஞர்

## இயற்கை எழிலில் உயர் நாடு.

இந்த வண்ணப் புகைப்படத்தை அனுப்பி வைத்த திலீப் பானர்ஜி பட விளக்கம் ஏதும் அனுப்பவில்லை. "படமே பேசுகிற போது விளக்கம் எதற்கு?" என்று எண்ணி விட்டார் போலும்!

சுற்றுச் சூழலின் எழிலில் லயித்த அந்த நாரைகள் கூட மீன் கொத்தவும் மறந்து மயங்கியிருப்பது போல் தோன்றவில்லையோ! இந்த இயற்கை அழகைத்தான்,

"ஆற்றினிலே சுனை யூற்றினிலே — தென்றற்
காற்றினிலே மலைப் போற்றினிலே...
...உயர் நாடு"

என்றும்,

"தோட்டத்திலே மரக் கூட்டத்திலே — கனி
யீட்டத்திலே பயிரூட்டத்திலே...
...உயர் நாடு"

என்றும் பாடினான் பாரதி.





கள் ஆஜராகினர். குறிப்பிடப்பட வேண்டியவர் பல்கிவாலா. மூன்று நாட்கள் வாதம் செய்தார். அதைக் கேட்ட பலர் சுவாமிநாதனை நினைத்து மிகவும் பரிதாபப்பட்டனர். தமிழக அரசு இந்த வழக்கில் தோற்று விடும் என்று கருதினார்கள். கோவிந்த் சுவாமிநாதன் வாதாட வேண்டிய சமயம் வந்தது. அன்று வியாழக்கிழமை. ராகுகாலம் 1½யிலிருந்து 3 மணி வரை. 2. 55க்கு வாதாட எழுந்தார் சுவாமிநாதன். கோர்ட் அறையிலிருந்த கடிகாரத்தைப் பார்த்தார். பின்பு நீதிபதிகளைப் பார்த்து, "மிலாட் இது ராகு காலம். ஸெண்டிமெண்டலாக நல்ல நேரம் கிடையாது. மூன்று மணி வரை இந்த ராகு காலம் இருக்கிறது" என்று கூறி நிறுத்தினார். உடனே நீதிபதி "மிஸ்டர் சுவாமிநாதன், வேண்டுமானால் ஐந்து நிமிடம் கோர்ட்டை ஒத்திப் போடுகிறோம்" என்றார். "வேண்டாம் மிலாட்" என்று ஆரம்பித்து இரண்டு நாட்கள் வாதம் செய்தார். பரம்பரை அர்ச்சகர் முறையில், வாரிசு இல்லாத போது, பரம்பரை உரிமை தவறாக உபயோகப்படுத்தப்படுவதையும், சட்ட விதிகளில் தகுதி, திறமை, பார்த்து அர்ச்சகர்கள் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் என்று கூறப்பட்டிருப்பது சரியானதே என்றும் வாதாடினார். கேஸ் தமிழக அரசு பக்கம் ஜெயித்தது.

### அரசியலா — 'நோ'

அட்வகேட் ஜெனரலாக இருந்த ஆறு வருடங்களில் மூன்று முறைக்கு மேல் அப்போது முதல்வராக இருந்த கருணாநிதியை சந்தித்திருக்க மாட்டார். இவரது தாயார் அம்மு சுவாமிநாதன் நோய்வாய்ப்பட்டு இருக்கும் போது, பிரதமராக இருந்த இந்திரா அவரைப் பார்க்க வந்திருந்தார். அந்தச் சமயத்தில், டெல்லியில் இந்திரா காந்தியின் பண்ணையில் கூலியாட்கள் அடிமைகளாக நடத்தப்படுகிறார்கள் என்று கண்டித்துப் போராட்டம் நடத்திய சுவாமிநாதன் மகள் லதாவை ஜெயிலில் போட்டுவிட்டார்கள். தனது தாயாரை இந்திரா சந்திக்கும்போது, இந்த விஷயம் பற்றி எதுவும் பேசக் கூடாது என்று தாயாருக்கு உத்தரவு போட்டது மட்டுமன்றி, இந்திரா அவர் வீட்டிற்கு வரும் நாளன்று வெளியூர் சென்று விட்டார் கோவிந்த் சுவாமிநாதன்!

* * * * * *

74 வயதிலும் கோவிந்த் சுவாமிநாதன் காலை 4½ மணிக்கே எழுந்து விடுகிறார். கிண்டிக்குச் சென்று குதிரை சவாரி. பின்பு வீட்டிற்கு வந்து கேஸ்களைப் படிக்க ஆரம்பித்தாரானால் யாரும் தொந்தரவு செய்யக் கூடாது. கோர்ட் ஆரம்பிப்பதற்குப் பத்து நிமிடம் முன்னதாகவே சென்று விடுவார். தனது ஜூனியர்கள் நல்ல பாயிண்டாக எடுத்துக் கொடுத்தால் நீதிபதியிடமே ஜூனியரைப் பாராட்டிச் சொல்லுவார். மூன்று முறை ஜட்ஜ் பதவிக்கு சான்ஸ் வந்தும் வேண்டாம் என்று மறுத்தவர் சுவாமிநாதன்.

தகவல் தொகுப்பு: ப்ரியன்
படம்: எட்வர்ட்

# களிப்பு தரும் களிமண்!

வெளியூருக்குப் போனால் நம் வீட்டுப் பூந்தொட்டிகளுக்கு யார் தண்ணீர் விடுவார்கள்? இந்தப் பிரச்னையை மேற்கு ஜெர்மானிய விஞ்ஞானிகள் வெற்றிகரமாகத் தீர்த்து வைத்து விட்டார்கள்!

ஒரு புது ரகக் களிமண் கண்டுபிடித்திருக்கிறார்கள். இதில் பயிராகும் பூஞ்செடிகளுக்கு வாரக் கணக்கில் நீர் ஊற்ற வேண்டியதில்லை.

ஆயிரம் டிகிரி சூடேற்றப்பட்டு பிறகு வெப்பம் தணியப் பெற்ற இந்தக் களிமண் தன் கன பரிமாணத்துக்குப் பாதி அளவுக்கு நீரை ஈர்த்து வைத்துக் கொள்ளும். பூஞ்செடியின் வேர் மண்ணில் புதைந்திருக்க, அந்த மண்ணைச் சுற்றி இந்தக் களிமண் போடப்படுகிறது. சிறிது சிறிதாக வேர், களிமண்ணிலிருந்து மண்ணுக்குப் பாயும் நீரை ஈர்த்துக் கொள்கிறது!

—ஸ்காலா

## டெபாசிட்தாரர்களுக்கு

# 24%

### வட்டி வழங்கப்படுகிறது

மேற்படி கூடுதல் வட்டி பென்ஷனர், மகளிர், மைனர்களுக்கு மட்டும்

''வெள்ளிக் குத்துவிளக்கு'' அன்பளிப்புடன் வழங்கப்படும்

கீழ்க்கண்ட வட்டி விகிதங்களில் டெபாசிட்டுகள் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன

| காலம் | வட்டி |
|---|---|
| 1 - வருடம் | 17% |
| 2 - வருடங்கள் | 18% |
| 3 - வருடங்கள் | 19% |
| 5 - வருடங்கள் | 22% |

# ஜெயசக்தி பைனான்சியர்ஸ்

(A LEADING HIRE PURCHASE FINANCIERS)

| | |
|---|---|
| சென்னை | : 39, நடேச ஐயர் தெரு (2வது மாடி) சிவா-விஷ்ணு கோயில் அருகில் உஸ்மான் ரோடு, தி.நகர், சென்னை-600 017. போன் : 447186/442218 |
| பெங்களூர் | : 24/1-A, மார்கோஸா ரோடு (10வது கிராஸ்) மல்லேஸ்வரம், பெங்களூர்-560 003. போன் : 366971 |
| திருச்சி | : 22 மதுரை ரோடு (முதல் மாடி) ராஜ தியேட்டர் அருகில், திருச்சிராப்பள்ளி-620 008. போன் : 29772 |
| பாண்டிச்சேரி | : 11, நேரு தெரு (கனரா வங்கி எதிரில்) பாண்டிச்சேரி-605 001. போன் : 6493 |
| தஞ்சாவூர் | : எண் : 2 & 3 முதல் மாடி ஜி. ஏ. கனல் ரோடு, தஞ்சாவூர்-613 001. போன் : 1626 |
| திருவண்ணாமலை | : 14/A, ஆனைக்கட்டி தெரு, திருவண்ணாமலை-606 601. போன் : 2483 |
| பட்டுக்கோட்டை | : 9-A, தலையாரி தெரு, பட்டுக்கோட்டை-614 601. போன் : 453 |

JAY ADTS. J.F.103

# ஆகாச கங்கை

**பி. வி. ஆர்.**

## 23

அரவிந்தன் ஆராமுதன் சொன்ன செய்தியைக் கேட்ட போது அதிர்ச்சியும் ஆத்திரமும் அடைந்தாலும் சிறிது நேரத்திலேயே தாரக்ராமை மனத்திலிருந்து ஒதுக்கி விட்டான். மாயாவின் நிலைமையைப் பற்றி அவன் இதுவரை அவருக்கு எழுதியதில்லை. எழுத வேண்டும் என்று நினைத்ததும் கிடையாது. அவனுடைய உண்மையான நிலைமை எப்படி இருக்கிறது என்று தெரிந்து கொள்ளத் தாரக்ராம் விழைவது பெற்று வளர்த்த பாசத்தின் இயல்பான எதிரொலி தான். என்னதான் இரக்கமற்ற முறையில் நிபந்தனைகள் மூலம் அவன் அவருக்குத் தடைகள் விதித்திருந்தாலும் அவருடைய பாச வெறியை அவனால் எப்படித் தடுக்க முடியும்?

"அந்து... அநதா...." ஒரு ராகத்துடன் மாயா அழைத்துக் கொண்டே அவனருகில் வந்தான். அவனுடைய கழுத்தைப் பின்புறத்திலிருந்து கட்டிக் கொண்டான்.

"என்ன மாயா வேணும்?" கேட்கும் போதே அவனுக்கு ஒரு விஷயம் புரிந்தது. கடந்த சில வாரங்களாக மாலை வேளைகளில் மாயா எப்போதும் இல்லாத அமைதியுடன் இருக்கிறான். காலையில் ஒரு சிணுங்கல் இருக்கும். குளிக்கும் போது கர்ண கொடூரமாகப் பாட்டு. பல நாட்கள் நெற்றிக்கு இட்டுக் கொள்ள மறந்து போவான். மத்தியானம் சாப்பிட அடம் பிடிக்கும் போது ஒன்று கத்துவான் அல்லது அழுவான். அரவிந்தனை குழந்தைக்கு ஊட்டி விடுவது போல் ஊட்டுவான். அதன் பிறகு தூக்கம். தூக்கத்தில் சில நாட்கள் அலறல். வார்த்தைகளின் கோவை இராது. எதை நினைத்து அலறுகிறான் என்றும் புரியாது.

நான்கரை மணிக்கு எழுந்திருந்தால் ஒரே குதூகலம். இது ஏழரை எட்டு மணி வரை நீடிக்கும். ஒன்பது மணிக்கு மேல் மாயா எப்படி இருப்பான் என்று யாராலும் உறுதியாகச் சொல்ல முடியாது. ஒன்று நடுநிசி வரை கட்டிலிலேயே உட்காருவான். அல்லது கூண்டுக்குள் அயராமல் சுற்றிச் சுற்றி நடக்கும் சிங்கம் புலி போல் கட்டிலைச் சுற்றிச் சுற்றி நடந்து, சம்பந்தா சம்பந்தமில்லாமல் பேசுவான். சிரிப்பான். அழுவான்.

ஒரு நாள் அவன் அழ ஆரம்பித்தான். ஓயவில்லை. அரவிந்தன் கட்டிலுக்கு எதிரே ஒரு டீப்பாயைப் போட்டு அதன் மேல் உட்கார்ந்து அவனையே பார்த்தான். பிறகு மெல்ல அழ ஆரம்பித்தான். அவனுடைய



விசும்பல் அவளைத் தொட்டிருக்க வேண்டும். அழுது கொண்டே இருந்தவன் திடீரென நிறுத்தி விட்டு, "அந்து, நீ ஏன் அழறே?" என்று கேட்டான்.

"நான் அழலியே மாயா?"

"பொய். நீ அழுதே... ஏன்? உன்னையும் யாராவது கொடுமைப்படுத்தினளா?"

"இல்லே".

"அப்ப ஏன் அழுணும்? அழாதே, அந்து... நீ அழுதா நானும் அழுவேன்".

அரவிந்தன் ஆச்சரியப்பட்டான். இத்தனை நேரமாக அழுது கொண்டிருந்தவன் அதை நிறுத்தி விட்டு அவனைச் சமாதானப் படுத்துகிறன். அதே சமயம், 'அவனையும்' யாராவது கொடுமைப்படுத்தினர்களா என்று கேட்கிறன். என்ன அர்த்தம்? மாயாவின் இந்த மன நிலைக்கு மனப் பிராந்திக்கு ஏதோ ஒருமூல, காரணம் இருக்க வேண்டும். அது என்ன? யாரிடம் விசாரிப்பது?

மாயா சாயந்திர வேளைகளில் மட்டும் அதீதமான குதூகலத்தில் இருப்பது ஏன் என்று அரவிந்தனுக்குப் புரியாவிட்டாலும் இது ஒரு நல்ல அறிகுறியாகப் பட்டது.

இப்போது அவன் அவனுடையகழுத்தைக் கட்டிக் கொண்டு ஊளிப் பாட்டு பாடுகிறன்.

"அந்து ... அந்தூ ..."

"என்ன மாயா?"

"இன்னிக்கும் பீச்சுக்குப் போலாம்"

"சரி".

கடந்த சில வாரங்களாக மாயாவை பெசண்ட் நகர் கடற்கரைக்கு அழைத்துச் செல்லுகிறன். வீட்டிலிருந்து பார்த்தாலே நீலக் கடல் தெரியும். இருந்தாலும் மணற் பரப்பில், அவனுடைய கையைப் பிடித்துக் கொண்டு குதித்து குதித்து நடப்பதில் அவனுக்குத் தனி ஆனந்தம்.

"சரின்னு சொல்லி இடிச்ச புளி மாதிரி உட்கார்ந்தா எப்படி, அந்து?"

அவன் எழுந்தான்.

மெல்ல அவனுடைய இரு கைகளின் பின்னலை அவிழ்த்து விட்டான்.

"ட்ரெஸ் பண்ணிண்டு வா, மாயா!"

"சரியாப் பாரு... இந்த டிரெஸ்ஸுக்கு என்ன குறைச்சல்?"

அரவிந்தன் சிரித்தான்.

"ஸாரி டியர், நான் பார்க்கலே".

மாயா அவனைக் கூர்ந்து பார்த்தான். அவனுடைய ஊடுருவலில் அவன் சஞ்சலப் பட்டான். ஏன் இப்படிப் பார்க்கிறன்?

"அந்து".

"என்னம்மா?"



''நீ எங்கிட்டே ரொம்ப ஆசையா ரொம்பப் பிரியமா இருக்கே இல்லே?''

''ஏன் மாயா சந்தேகம்?''

''எனக்கு உன்னை ரொம்பப் பிடிச்சிருக்கு, அந்து''.

''ரொம்ப தாங்க்ஸ்''.

''இதுக்கெல்லாம் தாங்க்ஸ் சொல்லுவானா?''

''தப்புத்தான் மாயா''.

''அந்து ...''

''உம்''.

''நீ ஒரு நாள் கூட என் கன்னத்தைத் தொட்டதில்லே... என்னைக் கிஸ் பண்ணல்லே... என்னைக் கட்டி அணைச்சுண்டதில்லே...''

என்ன பதில் சொல்லுவது?

அரவிந்தன் மௌனமாய் அவளைப் பார்த்தான்.

''என் பெட்ரூம்லே நான் ஒருத்திதான் படுத்துக்கறேன், அந்து. ரூமுக்கு வெளியே பாலம் நீ ஒரு பாயிலே படுத்துக்கறே...''

''பீச்சுக்குப் போகலாம், மாயா?''

''நீ என் ஹஸ்பெண்ட். நான் உன் ஒய்ஃப். ஆனாலும் உன்னை நான் கட்டிலுக்கு வரக் கூடாதுன்னுட்டேன்''.

''அது உன் இஷ்டம் மாயா''.

''அந்து ...''

''உம்...''

''உலகத்திலே நான் பார்த்த ஆண்பிள்ளைகளெல்லாம் ரௌடிகள், என்னை ரேப் பண்ண ட்ரை பண்ணினவங்க...''

''வா மாயா, பீச்சுக்குப் போகலாம்''.

''கேளு அந்து... ஒரு நாள் மலபார் ஹில்ஸ்லே ஹாங்கிங் கார்டன்ஸ்லே விளையாடிண்டிருந்தேன்... எத்தனை வருஷத்துக்கு முன்னாலேன்னு தெரியலே. திடீரென்று இருட்டுடுத்து பார்த்தேன். ஒரே கருமேகம். மழை கொட்டப் போறதுன்னு நினைச்சேன். ரோட்லே கார் நிக்கறது. டிரைவர் கார்லே உட்கார்ந்திருக்கான். உடனே ஓடணும்னு தோணித்து. ரொம்பப் பேர் ஏற்கனவே கார்டனை விட்டு ஓடியாச்சு. நானும் வேகமா நடக்க ஆரம்பிச்சேன்''.

''மாயா மணி அஞ்சரை. வா. சீக்கிரம் திரும்பி வந்தாத்தானே, டி. வி. பார்க்கலாம்...''.

சொன்னவன் மாயாவைப் பார்த்தான்.

அவள் தரையில் படுத்திருந்தாள். கண்கள் மூடிக் கிடந்தன. ஆழ்நிலையில் இருப்பவளைப் போல சரீரம் ஆடாமல் அசையாமல் சலமாய்க் கிடந்தது.

ஆனால் உதடுகள் லேசாக அசைந்தன. வார்த்தைகள் ஒவ்வொன்றாய் ஒன்றன் பின் ஒன்றாய் சீராக வந்தன. அரவிந்தனை திகில் பிடித்துக் கொண்டது. என்ன சொல்லப் போகிறாள்? உள்ளே இத்தனை ஆண்டுகளாகத் தேங்கிக் கிடந்து அவளை ஆட்டி வைத்த அனுபவத்தைக் கூறுகிறாளா?

''.... நான் வேகமாக நடக்கிறேன் அந்து. திடீரென்று கார் டிரைவரோட குரல் கேட்கிறது. குடையுடன் வரான்னு நினைச்சு இருட்டில் பார்க்கிறேன். மழை கொட்டுகிறது. கண்களில் களீர் களீர்னு மழை அம்பாக் குத்தறது. ஆறு டிரைவர் வந்து விட்டானேன்னு ஒரு திருப்தி. அவன் என்னைக் கூப்பிட்டப்ப நான் பதில் சொன்னேன். கத்தினேன். திடீர்னு பின்னாலேந்து ஒரு ஆள் — அவன் மூஞ்சியை அப்ப நான் பார்க்கலே — என் இடுப்பைப் பிடிச்சான் அந்து. இதோ இந்த இடுப்பைப் பிடிச்சான். பயத்திலே உறைஞ்சு போயிட்டேன் கத்த முடியலே. என் டிரைவர் இருட்லே மழையிலே என்னைத் தேடித் தேடி அலையறான்னு உணர்ந்தேன். என்னைப் பிடிச்சவன் என் மாக்ஸியைக் கிழிச்சான். என் உடம்பிலே மாக்ஸி இல்லே. என் பிரேஸியரைத் தொட்டான். அழுத்தினான். எனக்கு வலிச்சுது. ஐயோன்னு கத்தினேன். மழையிலே யார் காதிலேயும் விழலே. என்ன செய்யறதுன்னு புரியலே. கதறேன். என் குரல் எனக்கே கேட்கலே. அப்பத்தான் திடீர்னு ஒரு மின்னல் — அந்த மாதிரி மின்னலை நான் ––– வுமே பார்த்ததில்லே, அந்து. அந்த மின்னல் வெளிச்சத்திலே நான் என் நிர்வாணத்தைப் பார்த்தேன். என்னைத் தாக்கினவனோட அரை நிர்வாணத்தைப் பார்த்தேன். கொஞ்ச தூரத்திலே என் டிரைவர் நிக்கறதைப் பார்த்தேன். ஒரு ஆவேசம் என்றுள்ளே பூந்துட்டுது. குனிந்தேன். ஒரு பெரிய கல் கையில் மாட்டிண்டது. நான் குனிஞ்சப்ப, அவன் என்னை அணைச்சு, கன்னத்தைக் கடிச்சான்.



'பாட்னா' மக்கள் கொசுத் தொல்லை தாங்காமல், ஒரு புதிய போராட்டத்தை நடத்தினர்.

கையில் 'பின்' ஏந்தி, கொசுக்களை ஒழிக்கத் தவறிய அதிகாரிகளைச் சூழ்ந்து கொண்டு, கொசுக்கடி எப்படி இருக்கும் என்று அவர்களை உணர வைக்க அந்தப் 'பின்'களாலேயே அவர்களைச் 'சரக் சரக்' என்று குத்தினர்.

— சம்பத் குமாரி

ஆதாரம்: 'ஸன்டே'

கற்பனை பல சிறகடிக்க
இளமை ஊஞ்சலாடும் அழகி.
அவள் நெஞ்சைக் கவர்ந்தவை பல.
மெல்லத் தவழ்ந்து செல்லும் நீரோடை.
செல்லமாக வீசும் தென்றல்.
உள்ளம் கவர்ந்த கட்டழகன்.
கொள்ளை அழகு மலர்கள்.
பளபளப்பான நீண்ட கூந்தல்.
அக்கூந்தலுக்கு
வி.வி.டி.தேங்காய் எண்ணெய்...







**வி.வி.டி. தேங்காய் எண்ணெய்**

இயற்கைக் கூந்தலின் இளமை ரகசியம்




EP-VVD-6/84

தனக்குக்கணவன் கிடைக்கும் வரையில்தான் பெண் எதிர்காலத்தைப் பற்றிக் கவலைப்படுகிறாள். ஆனால் ஆடவனோ தனக்கு மனைவி கிடைத்த பிறகுதான் எதிர்காலத்தைப் பற்றிக் கவலைப்படுகிறான்.

கம்பாளையம். - அருண்மணி





அவர்: அதோ பால்கனியிலே உக்காந்திருக்காங்களே அந்தக் குடும்பமே டாக்டர்தான். அவர், அவரோட மனைவி, அம்மா, அப்பா, தங்கை எல்லோருமே டாக்டர்கள்தான்.

இவர்: ஓ! டாக்டர் ஃபேமிலியா! அதுசரி, அங்கே தனியா ஒருத்தர் உட்கார்ந்திருக்காரே அவர் யாரு?

அவர்: அது அவங்க ஃபேமிலி டாக்டர்!

—ஏ. ஜி. வல்லபதாஸ்.

"திமார்னு என் டிரைவர் ஓடி வர்றது தெரிஞ்சுது. அதே சமயம் என் கையிலிருந்த கல்லாலே என்னைக் குதறியவன் தலையிலே டமார்னு போட்டேன். அப்புறம்தான் ஓடவே முடிஞ்சுது... டிரைவர் அவனைப் பிடிச்சுட்டான். ஆனா பிடிச்சவன் நகரலே... வேற ஒரு ஆள் வந்து டிரைவரைக் குத்திட்டான். அப்பா அவன் குடும்பத்துக்குப் பத்தாயிரம் கொடுத்து, பிள்ளைக்கு வேலையும் கொடுத்தார்.

"அன்னிக்கு நான் முக்கால் நிர்வாணமா மழையிலே ஓடி ஓடி வழி புரியாமத் திரிஞ்சு கடைசியிலே வீட்டு வாசல்லே விழுந்தேன். அந்து. அப்புறம் நான் இன்னும் எழுந்திருக்கலே அந்து... இன்னும் எழுந்திருக்கலே!"

திடீரென்று மாயா கண்ணைத் திறந்தாள். அரவிந்தனைப் பார்த்தாள்...

"அந்து. அந்து...

"உம்".

"ஏன் அழறே அந்து... உன் மனசைப் புண்படுத்திட்டேனா? ஸாரி. அந்து.... வா பீச்சுக்குப் போகலாம்".

அரவிந்தன் எழுந்தான்.

"என்னாலேதானே என் டிரைவர் செத்துப் போனான்?" என்றாள் அவள்.

"இல்லே"

"எப்படிச் சொல்றே?"

"நீதான் ஓடி வந்தாச்சே. அப்புறம் அவன் என் இருட்டிலே, மழையிலே, முன்னே பின்னே பார்த்திராதவன் கிட்டே. அவன் கையிலே என்ன ஆயுதம் இருக்கும்னு தெரிஞ்சுக்காம சண்டைக்குப் போகணும்?"

"டிரைவர் வயத்திலே கத்தியாலே குத்தினவன் வேற ஆள். அந்து.... இதை நீ புரிஞ்சுக்கலியா?"

"என்ன இருந்தாலும் உன்னை அவன் தனியா விட்டுட்டு சண்டைக்குப் புறப்பட்டிருக்கக் கூடாது... எப்ப நீ ஓட ஆரம்பிச்சயோ அப்பவே அவன் உன்னோட வந்து காரிலே உட்காரவைச்சு வண்டியைக் கிளப்பியிருக்கணும்!"

"அந்து!" என்றாள் மாயா, திடீரென்று. அவன் இத்தனை நேரம் பேசியதை லட்சியம் செய்யாதவளாய்.

"என்ன மாயா?"

"என்னை பார்க்கிற ஒவ்வொரு ஆம்பிள்ளையும் என் உடலையே உரிச்சுப் பார்க்கறான்னு எனக்குப் படறது. ஏன் அந்து அப்படிப் படணும்? ஒவ்வொருத்தனும் என்னை ரேப் பண்ணத்தான் துடிக்கிறான்னு தோணறது. ஏன் அப்படித் தோணணும்?"

"நான் அப்படி இல்லேங்கறதையாவது புரிஞ்சுக்கோ மாயா".

"அதை நான் புரிஞ்சுண்டேன் அந்து. நீ எவ்வளவு நல்லவன்னு தெரியும். ஆனா... ஆனா..."

"என்ன மாயா?"

"உன்னை ஒருத்தி ரேப் பண்ணப் போறா! நீ ரொம்ப ஜாக்கிரதையா இருக்கணும். அந்து"

"அது யார் மாயா என்னைக் கெடுக்கப் பார்க்கிறவள்!"

"தெரியாது?"

"ஐ ஹோப்".

"ஷ்யூர்?"

"ஷ்யூர்!"

"நீ ஒரு மக்கு பிளாஸ்திரி!"

சொல்லிவிட்டு மாயா கலகலவென்று சிரித்தாள்.

அதே சமயம் மின்சார மணி அடித்து அரவிந்தனை வாசலுக்கு அழைத்தது.

யார்?

தாரக்ராமா?

அரவிந்தன் கதவைத் திறந்தாள். ஆச்சரியமும் திகைப்பும் பிறந்தன.

(தொடரும்)

# மைசூர் லாம்ப்ஸ்










முதல் பரிசு : ரூ. 50,000/- பெறுமான தங்க நெக்லஸ் (அல்லது ரூ. 50,000/- ரொக்கம்)

இரண்டு மேலும் பரிசுகள் : ரூ. 10,000/- பெறுமான ஒரு ஜோடி தங்க வளையல்கள் (அல்லது ரூ. 10,000/- ரொக்கம் ஒவ்வொன்றுக்கும்)

மூன்று மேலும் பரிசுகள் : ரூ. 8,000/- பெறுமான கலர் டிவி (அல்லது ரூ. 8,000/- ரொக்கம், ஒவ்வொன்றுக்கும்)

நான்கு மேலும் பரிசுகள் : ரூ. 3,000/- பெறுமான கருப்பு வெள்ளை டிவி (அல்லது ரூ. 3,000 ரொக்கம் ஒவ்வொன்றுக்கும்)

இருபத்தைந்து மேலும் பரிசுகள் : ரூ. 550/- பெறுமான மூன்று பாண்ட் டிரான்சிஸ்டர் (அல்லது ரூ. 550/- ரொக்கம் ஒவ்வொன்றுக்கும்)

1000 ஆறுதல் பரிசுகள் : 'T' சட்டைகள்

**ஒவ்வொரு வாரமும் 50 முன்னோடி நுழைவுக்காரர்களுக்கு ரூ. 51/- பரிசாக வழங்கப்படும்**

**வழி காட்டும் ஒளி போட்டி:**

ஐந்து ஒளிகாட்டும் ஐந்து விளக்குகளின் வரை படங்கள் இங்கே கொடுக்கப்பட்டுள்ளன. அவைகள் மேஜை விளக்கு, தொங்கு விளக்கு, போக்குவரத்து விளக்கு, சிக்னல் (கைகாட்டி) விளக்கு மற்றும் கலங்கரை விளக்கு. அதற்கு கீழே அந்தந்த விளக்குகளோடு சம்பந்தப்பட்ட மனிதர்கள்/பொருட்கள் கொடுக்கப்பட்டுள்ளன. நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம் அந்தந்த விளக்குகளோடு அதை உபயோகிப்பவர்களை இணைக்க வேண்டும். உதாரணமாக வைத்தியர்கள் (c) தொங்கு விளக்குகளை அறுவை சிகிச்சைக்கு உபயோகிக்கிறார்கள், எனவே தொங்கு விளக்கின் கீழேயுள்ள கட்டத்தில் (c) என்று குறிப்பிட்டுள்ளது. இதைப் போலவே அந்தந்த விளக்குக்கு ஏற்றவாறு A, B, D மற்றும் E எழுத்துகளை எழுதுங்கள்.

**வாக்கியத்தைப் பூர்த்தி செய்யவும் :**

கீழே தரப்பட்டுள்ள வாக்கியத்தில் கோடிட்ட இடத்தில் ஒரு வார்த்தையை எழுதி பூர்த்தி செய்யவும்: "மைசூர் லாம்ப்ஸ் இது ஒரு ________ விளக்கு." உதாரணமாக "மைசூர் லாம்ப்ஸ் இது ஒரு சிறந்த விளக்கு" என எழுதலாம். மற்றுமொரு தகுதியான வார்த்தையை தேர்ந்தெடுங்கள். தங்க புதையல் உங்களுக்காக காத்திருக்கிறது.

நீங்கள் எத்தனை நுழைவுத்தாள்களை வேண்டுமானாலும் அனுப்பலாம். ஆனால் ஒவ்வொரு நுழைவுத்தாளுடனும் மைசூர் லாம்ப்ஸ் பல்ப் உறையின் விலை விவரம் கொண்ட தாள் முழுமையாக இணைக்கப்பட வேண்டும். அது 25, 40, 60 அல்லது 100 வாட் பல்ப் இவைகளில் எது வேண்டுமானாலும் இருக்கலாம். ஒவ்வொரு தாளுடனும் ஒரு விலைப் பட்டியல் உறை இருத்தல் வேண்டும்.



கடைசி நாள் ஜூலை 31, 1985.

நுழைவுத் தாள்களை அனுப்பும் முகவரி :
ஸ்ரீ மைசூர் லாம்ப் ஒர்க்ஸ் லிமிடெட்
தபால் பெட்டி எண் 5572
மல்லேஸ்வரம் மேற்கு போஸ்ட்
பெங்களூர் 560 055

**நுழைவுத் தாள்**




ஒரு வார்த்தையை உபயோகித்து வாக்கியத்தை பூர்த்தி செய்யவும்.
மைசூர் லாம்ப்ஸ் இது ஒரு ........................................ விளக்கு.
பெயர் விலாசம்




**மைசூர் லாம்ப்ஸ்—வழிகாட்டும் ஒளி**

CLARION MLW 8545 Tam

# என்ன போட்டி வைக்கலாம்?

## வாசகர் பங்கு

வாசகர் பங்கு பகுதியில் "என்னென்ன போட்டிகள் வைக்கலாம்?" என்று கேட்டிருந்ததற்கு வந்துள்ள யோசனைகளுள் ஏற்கப்பட்டிருப்பவை இவை. வாசகர்கள் பங்கேற்கக் கூப்பனுடன் வாரம் ஒன்றாக இந்த அறிவிப்புகள் தனியே மீண்டும் பிரசுரமாகும்.

☆ **டி. கே. நாராயணன், சென்னை—25.**

நீங்கள் எப்போதாவது மேடை ஏறிப் பேச வேண்டிய அனுபவம் ஏற்பட்டிருக்கலாம். அப்போது உங்கள் மனநிலை, சமாளித்த விதம் பற்றி எழுதுங்கள்.

☆ **எல். வத்ஸலா, திருவாரூர்.**

கோபப்படுவது மனித இயல்பு. தனி நபர் என்று இல்லை. மக்கள் மீது, சமுதாயத்தின் மீது கூடக் கோபம் வரத்தான் செய்கிறது. உங்களுக்கு ஏற்பட்ட அர்த்தமுள்ள கோபத்தை வாசகர்களுடன் பகிர்ந்து கொண்டு ஆறு தணியுங்களேன்!

☆ **ஜி. விக்ரம், சென்னை—17.**

நீங்கள் வாழ்க்கையில் எத்தனையோ நபர்களைச் சந்திக்கிறீர்கள். அவர்களில் வாழ் நாள் முழுதும் மறக்க முடியாத நபராக யாரைக் கருதுகிறீர்கள். ஏன்?

☆ **டி. சந்திரசேகர், சென்னை—13.**

ரேஷன் க்யூவில் நிற்கும் போது உங்களுக்கு ஏற்பட்ட சுவையான அனுபவம்...

☆ **அ. சுந்தரம், சேலம்.**

அலுவலகத்திலோ, பள்ளி கல்லூரியிலோ அல்லது அக்கம்பக்க வீட்டிலோ ஒரே பெயருடைய இருவர் இருந்து அதனால் ஏற்பட்ட குழப்பம் அதைத் தொடர்ந்த சுவையான சம்பவம் ஏதும் இருக்குமே?







☆ **ஜி. கீதா, சென்னை—40.**

மொழி தெரியாத ஊரில் திண்டாடிய அனுபவத்தைச் சொல்லுங்கள். வாய்விட்டுச் சிரிக்கிறோம்!

☆ **கே. எஸ். குமார், விழுப்புரம்.**

பள்ளி அல்லது கல்லூரியில் உங்களால் மிகவும் மதிக்கப்பட்ட ஆசிரியர் யார்? அவரிடம் இருந்த சிறப்பு இயல்பு என்ன? அவரை அறிமுகப்படுத்துங்கள் கல்கி வாசகர்களுக்கு.

☆ **டி. விஜயா, சென்னை—53.**

பூவுலகில் ஒரு சொர்க்கம் உண்டானால் அது இதுதான்' என்று பொதுவாக மன்னர்கள் தங்கள் நந்தவனங்களில் பொறித்தனர். நீங்

கள் உங்கள் வீட்டை எப்போது, எந்த சந்தர்ப்பத்தில், சொர்க்கத்திற்கு நேராகக் கருதுவீர்கள்?

* கே. ராஜாமணி, வேலூர்.

உதவி செய்யப் போய் பாராட்டுப் பெறுவது சகஜம். ஆனால் உதவப் போய் வாங்கிக் கட்டிக் கொண்ட அனுபவமும் இருக்குமே? சொல்லுங்களேன், கேட்போம்!

* எஸ். விஜயா சீனிவாசன்,
திருச்சி—14.

முணுமுணுக்கும் மாமியாரை எப்படி சமாளிக்கிறீர்கள்? பலருக்கு உதவியாக இருக்குமே உங்கள் அனுபவத்தைச் சொன்னால்...!







* ப. கலைமணி, மாராடி

இளைஞர் ஆண்டான இந்த ஆண்டில் என்ன குறிக்கோளை ஏற்படுத்திக் கொண்டிருக்கிறீர்கள் உங்கள் முன்னேற்றத்திற்கு அல்லது சமுதாயத்துக்கு உதவும் வகையில்?

* ஏ. எம். ஸ்டெல்லா ராஜ், சரல்

மருத்துவமனையில் பலருக்கும் பலவித விசித்திர அனுபவங்கள் ஏற்பட்டிருக்கும். அது பற்றி வாசகர்களை எழுதச் சொல்லிக் கேட்கலாம்.

* ஜெயின் சேகர், பேயன்விளை.

சமீபத்தில் உங்கள் மனத்தை உலுக்கிய ஒரு நிகழ்ச்சியை உருக்கமாக எழுதி வாசகர்களைக் கண்கலங்கச் செய்யுங்கள். பார்ப்போம்.

* ஆர். செழியன், டோம்பிவில்
(தாணே மா.வ).

ஆபத்தில் உதவிய அல்லது உதவி பெற்ற அனுபவத்தை வாசகர்கள் பெருமையுடன் அல்லது நன்றியுடன் நினைவு கூரலாமே!

ராகமாலிகா வழங்கும் பட்டுப் புடவையைக் குலுக்கல் முறையில் பரிசாகப் பெறும் அதிர்ஷ்டசாலி:
ஜெயின் சேகர்,
192—B ஜெயின் நகர்,
பேயன்விளை 628 223.

# இடம்மாறிய காயங்கள்

பட்டுக்கோட்டை ராஜா

> "அப்படீன்னு நம்ம ரெண்டு பேருக்குமே மனசுக்கேற்ற வாழ்க்கை அமையலே. அப்போ நாம ரெண்டு பேரும் சேர்ந்து ஒரு புது வாழ்க்கை துவக்கினா என்ன?"

இவன் கோயிலுக்குள் நுழைந்தபோது தன்னை ஞானசம்பந்தரைத் தவிர வேறு யாருமில்லை. அவரும் சிலையாய்த்தானிருந்தார். கோவிலைத் திறந்ததோடு தன் கடமை முடிந்து விட்டதாய் நினைத்த பூசாரியும் அங்கில்லை. இனி மூடுவதற்கு வரலாம்!

இன்றைய நிலையில் ஞானசம்பந்தருக்குப் பக்தர்கள் மத்தியில் வாக்கெடுப்பு நடத்தினால் அவருக்கு 'டெபாஸிட்' கிடைப்பது கஷ்டம். அதனால்தான் ஜானகியை ஆள் நடமாட்டமில்லாத இந்தக் கோவிலுக்கு வரும்படி இவன் சொல்லியிருந்தான்.

காலையில் திடீரென்று அவளைத் தன் அலுவலகத்தில் பார்த்தபோது போலீசைக் கண்ட ஜேப்படிக்காரனைப் போல் இவன் பயந்தது நிஜம். ஒரு க்ஷணம் சுதாரித்துக் கொண்டு அவளை நெருங்கி, "என்ன ஜானகி இது திடீர்னு... என் கண்களை என்னாலேயே நம்ப முடியலே!"

கலங்கிய கண்களில் அலங்கோலமாய் நின்ற அவள், "இப்ப நான் உங்க ஜானகியா வந்திருக்கேன்... உங்கள்கிட்ட நான் கொஞ்சம் தனியாப் பேசணும்!" என்றதும் இவன் துணுக்குற்றான்.

சற்றே சலனப்பட்ட மனம் சூழ்நிலை சரியில்லையென்றது. "ஜானகி, நாம தனியாப் பேச இந்த இடம் வசதிப்படாது... சாயந்திரம் நாலு மணிக்கு நாம வழக்கமாச் சந்திக்கிற ஞானசம்பந்தர் கோயிலுக்கு வந்திடு... எதுவாயிருந்தாலும் அங்கே பேசிக்கலாம்" என்று சொல்லிவிட்டு, ஆபீஸுக்குள் நுழைந்து கொண்டான்.

ஜானகி இவனது அந்த நாள் காதலி. வசதியான வேறிடத்தில் பெண் கிடைத்த போது காதலை மறந்த இவன், ஜானகிக்கு நடத்தை கெட்டவள் என்று பட்டம் கட்டி அவளைத் தட்டிக்கழித்தான். அவள் இவனுக்கு எழுதிய காதல் கடிதங்கள் அதற்குச் சாட்சி கூறின.

பின் வந்த நாளில் ஜானகிக்கும் கூடத் திருமணம் நடந்தேறி வேற்றூர் சென்று விட்டதாய்க் கேள்விப்பட்டு நிம்மதியானான். கிட்டத்தட்ட இரண்டு வருடங்களுக்குப் பிறகு அவள் இவனைத் தேடி வந்திருக்கிறாள். 'தனியாகப் பேச வேண்டுமாம்!'

அவள் சென்ற பிறகு ஆபீஸில் இவனுக்கு இருப்பு கொள்ளவில்லை.

* * * * *

கோயிலுக்குள் இடப்பிராகாரத்தில் நடந்த போது அகண்ட தூண்களின் உச்சியில் அடைந்திருந்த மாடப் புறாக்கள் "க்கும்... க்கும்..." என்று புரியாத பாஷையில் இவனிடம் பேசின. பூஜைக்குத் தவாமல் சருகாகிக் கிடந்த வில்வ இலைகளின் மேல் 'சரக்... சரக்' கென்று சத்தம் கிளப்பிச் சுற்றுமுற்றும் பார்த்தபடியே நடந்தான் — இந்த விவகாரம் இவன் மனைவி லெட்சுமிக்குத் தெரிந்தால் ஆபத்து!

ஜானகி பிராகாரத்தின் மூலையில் குத்துக்காலிட்டு உட்கார்ந்திருந்தாள். அழுதழுது முகம் வீங்கியிருந்தது. கன்னங்களில் காய்ந்த கண்ணீரின் பளபளப்பு. இவன் தயக்கத்தோடே சென்று அவளுக்குச் சற்றுத் தள்ளி உட்கார்ந்தான்.

உடனே அவள் தேம்பித் தேம்பி அழ ஆரம்பித்தாள். பிறகு இவனையே சற்றுநேரம் உற்றுப் பார்த்தாள்.

"என்ன ஜானகி அப்படிப் பார்க்கிறே? நான் பழைய ராஜாதான்! ஆனா இப்போ கொஞ்சம் சதை போட்ட ராஜா!" — என்றிவன் சொல்லவும் அவள் லேசாய் முறுவலித்தாள். ஆனால் அடுத்த வினாடியே அவள் முகத்தில் சோகத்தின் ஆக்ரமிப்பு!

"ராஜா, உங்க வாழ்க்கை எப்படியிருக்கு.. நிம்மதியாக் குடும்பம் நடத்த உங்களால் முடியுதா?"

"ஏன் ஜானகி அப்படிக் கேட்கிறே?"

"ஏன்னா என்னால அப்படி இருக்க முடி



ஒரு மனிதனைத் தெரிந்து கொள்வதிலும், பத்து நாடுகளைத் தெரிந்து கொள்வது எளிது. —லூதர்.

— அருள்மணி

யலே... அடிக்கடி நாங்கள் நினைவு வந்து வந்து என்னை வதைச்சிட்டே இருக்கும்... திமர் திமர்னு நிதானம் தவறி அப்படியே சிலையாச் சமைஞ்சிடுவேன்...! அதுலயே என் கணவர் சந்தேகப்பட ஆரம்பிச்சிட்டாரு!''

''அய்யய்யோ, அப்படின்னு நம்ம காதல் விவகாரம் உன் கணவனுக்குத் தெரிஞ்சிடுச்சா?''

''எவ்வளவு நான்தான் நெருப்பைப் பஞ்சு போட்டு மூடி வைக்க முடியும்...? யார் மூலயாவோ நம்ம காதல் விஷயம் அவருக்குத் தெரிஞ்சிடுச்சி... அன்னிலேந்து நான் நரகத்தில்தான் வாழ்க்கை நடத்தறேன்!''

''சுத்தக் கிராதகனாயிருப்பான் போலிருக்கே?''

''நேற்று ராத்திரி குடிச்சிட்டு வந்து அவர் என்னை ரொம்பக் கொடுமைப் படுத்திட்டாரு... 'முடிஞ்சா அவனோடயே போய் வாழ்க்கை நடத்துடி'ன்னு என்னைக் கழுத்தைப் பிடிச்சி வெளியே தள்ளிட்டாரு...



எனக்கு வேறு வழி தெரியலே... அதான் பொழுது விடிஞ்சதும் விடியாததுமா கட்டின புடவையோட உங்களைத் தேடி வந்துட்டேன்!''

''சரி, இப்ப நீ என்ன முடிவு பண்ணியிருக்கே?''

''அன்னிக்கு நம்ம காதலுக்குச் சாட்சியா நின்னது இந்த ஆஞ்சநேயர்தான்... அவரையே சாட்சியா வச்சி இப்பவும் சொல்றேன்... இனி நான் வாழுறதும் சாகிறதும் உங்க கையில்தானிருக்கு!''

ஜானகி அப்படிச் சொல்லவும் இவன் சிந்தனையில் ஆழ்ந்து போனான். வலிய வந்த சொர்க்கத்தைத் தள்ளிவிட இவன் மனம் ஒப்பவில்லை!

''என்ன ராஜா யோசிக்கிறீங்க... உங்க மனைவிக்குத் தெரிஞ்சா விபரீதமாயிடுமேன்னு பார்க்கிறீங்களா... அவுங்க என்ன மாதிரி!''

''சுத்த ரசனையில்லாத ஜென்மம்... கற்பூர வாசனை தெரியாத கழுதை... போய் சொல்லி உன்னை ஒதுக்கினதுக்குத் தண்டனையாத் தான் ஆண்டவன் அவளை எனக்கு மனைவியா அனுப்பியிருக்கணும்... என் வாழ்க்கையிலும் நிம்மதியேயாது ஜானகி!'' — என்றிவன் மனது மூட்டையை அவிழ்த்து விட்டான்.

''அப்படின்னா நம்ம ரெண்டு பேருக்குமே மனசுக்கேற்ற வாழ்க்கை அமையலே... அப்போ நாம ரெண்டு பேரும் சேர்ந்து ஒரு புது வாழ்க்கை துவக்கினா என்ன?''

''தப்பில்லேதான்... ஆனா அது ரகசியமா இருக்கணும்... எங்காவது ஒரு தனிமையான இடத்தில் யாருக்கும் தெரியாம நம்ம குடும்பம் நடத்துவோம்... ஏன்னா என் மனைவி ஒரு மாதிரி... சொத்து பூரா அவ பேரில் தான் இருக்கு!'' — என்றபடியே இவன் கிட்டே நெருங்கி அவள் கையைப் பிடிக்கப் போனான்.

''கொஞ்சம் இருங்க... நம்மளோட புது வாழ்க்கையை இன்னும் இரண்டு சாட்சிகளை வச்சித் துவக்குவோம்!'' என்று ஜானகி சொல்லவும் அகண்ட தூண் ஒன்றின் பின்புறத்திலிருந்து இரண்டு பேர் வெளிப்பட்டனர்.

ஒன்று — ஜானகியின் கணவன்!

மற்றொன்று — இவன் மனைவி லெட்சுமி!

கனல் தெறிக்கும் கண்களோடு லெட்சுமி இவனை நெருங்கி வரவும், ஜானகி தன் கணவனோடு கோவிலை விட்டு வெளியேறினாள்.

''இத்தனை நாளைக்குப் பிறகு இப்படி ஒரு நாடகம் நடத்தி அவனைப் பழி வாங்கினதிலே உனக்கு என்ன நிம்மதி ஜானகி?''

''அந்தக் காதல் காயங்களை மனசுல ஏந்திக்கிட்டு நான் பட்ட அவஸ்தை உங்களுக்குத் தெரியாதுங்க... ஆண்டவன் புண்ணியத்தில் நீங்க எனக்குக் கணவனா வந்து வாய்ச்சீங்க... இப்போ என் காயங்களை இடம் மாற்றிட்டேன்... இனிமே அந்தப் பொறுக்கியால் நிம்மதியா வாழ்க்கை நடத்த முடியாது... அது போதுங்க எனக்கு!''



# தோட்டம் போட்ட அனுபவம்

**போட்டி 7.**

நீங்களோ உங்கள் நண்பரோ சிறிதாகவோ, பெரிதாகவோ தோட்டம் போட்ட போது ஏற்பட்ட ரசமான ஒரு அனுபவத்தைக் கீழே வெற்றிடத்தில் எழுதுங்களேன். வெற்றியோ தோல்வியோ எதுவானாலும் தோட்டக் கலையில் ஆர்வமுள்ளோருக்கு வழிகாட்டுவதாகத்தான் இருக்கும் உங்கள் அனுபவம். பிரசுரமானால் பரிசு. தவிர குலுக்கல் முறையில் ஒருவருக்கு வி.ஐ.பி. ஸூட்கேஸ். இந்த அரைப் பக்கத்தை முழுமையாகக் கத்தரித்து அனுப்புவதுடன் உறையின் மேல் ''தோட்டம் போட்ட அனுபவம்'' என்று குறிப்பிடல் அவசியம்.

**முடிவு தேதி: 1.7.85.**

**இன்னும் 46 விலையுயர்ந்த வி. ஐ. பி. ஸூட்கேஸ்களைப் பரிசாகப் பெறவாய்ப்புண்டு. வாரம் தவறாமல் போட்டிகளில் பங்கு பெறவும்.**

## வி.ஐ.பி. ஸூட்கேஸ் பரிசுத்திட்டம்

என் பெயர்: ..............................

விலாசம்: ..............................

..............................

லக்கேஜ் பெட்டித் தயாரிப்புத்
தலைவர்களின் படைப்பு—

# விஐபி
# கன்கார்டு

வந்திறங்குது இப்போது—

இதோ, ஜெட் யுகக் கட்டழகுள்ள
புதிய விஐபி கன்கார்டு! நாகரீக
நரம்போடிய அலாதி ஸ்டைலிங்.
கண்டறியாத வர்ண வகைகள்:
பீச க்ரீம் (செவ்வின மஞ்சள்),
டெஸர்ட் பிரவுன் (மணற் கபில
நிறம்), மிஸ்ட் க்ரே (பனிச்
சாம்பல்), க்ரீம் சாக்கலேட்,
மேலும் பலப் பல. உட்புறமோ
இடவசதி மிகுதி.

ஓடோடிப் பார்வையிடுவீர்:
அருகிலுள்ள வியாபாரியிடம்...
சொகுசு லக்கேஜ் புதுவரவுகள்.

## ஆகாயமெட்டும் எங்கள் அதிநவீனக் கற்பனை.




தேர்ந்தெடுக்க மிகப் பல வகைகள்,
வருங்கால யோக வரவுகளோ மேலும் பலப்பல.

LINTAS VIP M 10 2013 TM

# நேசக்கரம் நீட்டுகிறோம்

வட்ட மேஜை

தெற்கே இருந்து வரும் இளைஞர்களுக்கு – குறிப்பாகத் தமிழக இளைஞர்களுக்கு நேசக்கரம் நீட்டி உதவ ஒரு சங்கம் அமைத்துள்ளோம். இங்கு ஒரு முக்கிய பணியாக குஜராத் மாநிலத்தில் அல்லது சுற்று வட்டாரத்தில் வேலை வாய்ப்பு பெற்றுத்தர முயல்வோம். நாட்டமுள்ளவர்கள் தங்கள் கடிதத்துடன், சுய விலாசமிட்ட, தபால் தலை ஒட்டப் பெற்ற உறை இணைத்து பின் வரும் விலாசத்தில் எங்களுடன் தொடர்பு கொள்ளலாம்:

President, Youth Development and
Services Society,
13 A. Dhanalaxmi Flats., Vastrapur,
Ahmedabad-380 015.

* கல்கி, வெளியிடும் வாரம் ஒரு போட்டிகள் எங்கள் சிந்தைக்கு விருந்தாகவும் திறமைக்குச் சவாலாகவும் உள்ளது!

சீர்காழி. ஆர். எஸ். இராஜ்.

* ''மானுடம் இன்னும் சாகவில்லை'' என்பதை மனிதாபிமானத்துடன் கோடிட்டுக் காட்டியது 'மன்னிக்கப்படும் படு கொலைகள்!'

மன்னார்குடி. ஜி. நீலா.

* ''ஸ்டேஷன் மாஸ்டர் ஆக வேண்டுமா?'' மிகவும் பயனுள்ள கட்டுரை.

துடுப்பதி. டி. வி. தங்கவேலு.

* அட்டைப் படத்திலுள்ள குழந்தையின் கள்ளமில்லாச் சிரிப்பைப் பார்த்துவிட்டு ''அபார்ஷன்'' கட்டுரையைப் படித்த பின்னர் மனத்தை என்னவோ செய்தது.

சென்னை–5. குமரி ஜெய்.

* இயற்கைக் காட்சிகளை ரசிப்பதில் நாட்டில் ஆண்களை விடப் பெண்கள்தான் அதிகமாக இருப்பார்கள் போலிருக்கிறது.

சென்னை–5. வி. கே. சுப்பிரமணியன்.

* அதிசயக் கார் மூலம் திரு கார்த்திக் நாராயணன் பல ஆயிரம் பேரை வாழவைக்கிற வள்ளல் ஆகிறார்.

சென்னை–56. டாக்டர் நாவலர் தாசன்.

* ஊதாரித்தனமாகச் செலவு செய்யத் துடிக்கும் பெண்களுக்குச் சரியான சவுக்கடி ''ஒரு உண்மையின் கண்ணாம்பூச்சி'' சிறுகதை.

மதுரை–2. ஆர். வேலுமணி.

* ஈழத்தமிழர்களுக்காகக் கலைஞர் நடத்திய போராட்டத்தில் கலைஞரின் சாணக்கியத்தனத்தையும், எம். ஜி. ஆர். அரசின் ராஜதந்திரமின்மையையும் நடுநிலைக் கண்ணோட்டத்தோடு தலையங்கம் எழுதப் பட்டிருந்தது.

நெல்லிக்குப்பம். ஜெ. முகமது பாரூக்.

* சென்னையில் வள்ளுவர் கோட்டம் TO வாணி மஹால் வரை நடை பாதையின் அவல நிலையைப் படம் பிடித்து காட்டிவிட்டீர்கள். எங்கள் ஈரோட்டில் பல முக்கிய நடைபாதைகளில் காணப்படும் அவல நிலையை நான் படம் பிடித்துக் காட்டலாமா?

ஈரோடு–10. மேஜர்தாசன்.

* உண்மையாய், மனச்சாட்சிக்குக் கட்டுப்பட்டு வாழும் ஒரு தூயவனுக்குச் சோதனைகளும், வேதனைகளும் சகஜமென்பதை ''தெய்வம் ஒரு நாள் வரும்'' உணர்த்திவிட்டது.

மணவை–6. யு. ஏ. பி. புத்தகப்பிரியன்.

* சாலைகளைப் போடுதல், சாலைகளைப் புதுப்பித்தல் என்ற பெயரில் சாலைகளின் மட்டத்தை உயர்த்திக் கொண்டே போகின்றனர். அதற்குச் சமமாக வீட்டின் தரை மட்டத்தையும் உயர்த்திக் கொண்டே போவது சாத்தியமில்லை அல்லவா? இதனால் மழைக் காலங்களில் சாலையில் ஓடும் தண்ணீர் வீடுகளில் புகுந்து பொருட்களுக்கு சேதம் ஏற்படுகிறது. எனவே செலவு சற்றுக் கூட ஆனாலும் சாலைகளைப் புதுப்பிக்கும் போது தரை மட்டம் உயராமல் பார்த்துக் கொள்வது அவசியம்.

கோயமுத்தூர்–5. ராஜலட்சுமி.

(கடைசி கடிதம் பரிசு பெறுகிறது).



# மோகினி திருக்கோலம்

ஸ்ரீ வேணுகோபாலன்

35

**யாத்திரை தொடங்கியது.**

வர்மன் அந்த லிகிதத்தைப் பொக்கிஷம் போல் போற்றி வெளியே வந்தான். கனத்த இருட்டு எங்கும் மொய்த்திருந்தது. தெரு ஒன்றில் சென்று ஒரு சத்திரத்து அகல் விளக்கில் நின்று லிகிதத்தைத் திறந்தான்.

'நீங்கள் போனதிலிருந்து மனம் மிகவும் வியாகூலப்படுகிறது. இத்தனை நாளும் தனிமை என்னை வருத்தியதில்லை. இப்போது வருத்துகிறது. எனக்கு திடீரென்று குடும்ப நினைவுகள் வருகின்றன. முன்பு வந்ததில்லை. தூரத்தில் பணயமாக இருப்பதை முன்பு ஒரு தியாகமாக எண்ணினேன். இப்போது ஏன் அப்படி வந்தேன் என்று சஞ்சலிக்கிறேன். அப்பாவுக்கும் இதைக் குறித்து எழுதி இருக்கிறேன். இப்போது என் மனம் ஊரையும், வீட்டையுமே நினைக்கிறது.

இத்தனை நாளும் அவைகளை விட்டு நான் பிரிந்தது அர்த்தமற்றதாகத் தோன்றுகிறது.

ஒருவேளை எனக்கு சுயநலம் அதிகம் தட்டி விட்டதோ!

என் சுயத்தை நான் அதிகம் நேசிக்கத் தொடங்கி விட்டேனா?

வீரரே! அப்பாவுக்கு எழுதியிருக்கிறேன். 'சீக்கிரம் வந்து என்னை அழைத்துப் போங்கள்.'

லிகிதத்தை மூடினான்.

மழலையில் ஒரு கிளி அவனிடம் பேசியது போல் இருந்தது. பெருமூச்சு விட்டான்.

ஒரு வாரத்தில் காரியங்கள் சுறுசுறுவென்று நிகழ்ந்தன. பொம்மராஜூப் பாளையம் திவான் நரசிங்கம் அங்குமிங்கும் அலைந்து அலுவல்களைக் கவனித்தார். திருமலைக்குமேல் ஆட்கள் அடிக்கடி போய் வந்தார்கள். என்றைக்கும் காணாத ஸ்ரீநிவாசாச்சாரி ஊரில் தென்பட்டார்.

கார்வேட் ராஜா நினைவற்றுக் கிடப்பதைப் பார்த்து விசனமுற்றார். பெருமாளை நோக்கி, "சுவாமி இந்த நாட்டுக்கு என்ன



வந்திருக்கிறதென்று தெரியவில்லையே. நல்லவர்கள் எல்லாம் முடங்கிவிடுகிறார்களே! கோயில் பணத்தைத் தம் சொந்த சொத்துப் போல் பாதுகாக்க இனி யார் உள்ளார்? நெருக்கடி ஏறிக் கொண்டே போகிறதே!'' என்று நெஞ்சு உருகப் பிரார்த்தித்தார்.

ராணி அவரை அழைத்து நடந்ததை எல்லாம் கூறினார். புதுச்சேரியில் உள்ள பிரெஞ்சுக்காரர்களுக்குத் திருப்பதிபணத்தைஅனுப்பி வைக்கும்படி திருவுள்ளக் குறிப்பு என்று கூறினார்.

ஸ்ரீநிவாசாச்சாரியார்சிறிதுகூட யோசிக்கவில்லை. ''மகாராணி! ராஜ வம்சம் தாங்கள்! அதனால் தெய்வாம்சம் உள்ளவர்கள். தங்கள் திரு நாவில் நல்லதுதான் வரும் அல்லது வராது'' என்றார். பொக்கிஷத்தில் எந்த அளவு கொடுக்க உத்தரவு இட்டாலும் செய்வதாகக் கூறினார்.

ஐந்து பல்லக்குகள் சித்தமாயின. அத்தனையும் புதிதாகப் பூட்டப்பட்டவை.

அவற்றின் தூறுகக் கொம்பு முழுவதிலும் துவாரங்கள் இடப்பட்டு, திருப்பதிப் பொன்னும் மணியும் நிறைத்து மூடப்பட்டன.



அதுபோல பல்லக்கின் உட்காரும் தளம் இடையே இடைவெளி கொடுத்து இரட்டையாகச் செய்யப்பட்டது. உள்ளே பொன், வெள்ளிக் காசுகள் பூராவும் நிரப்பப்பட்டன. மரச் சிற்பங்களுள் துவாரம் செய்து வைரம், நீலம் போன்றவை நிரப்பப்பட்டன.

பொம்மராஜுப்பாளையம் வந்த பத்தாம் நாளில் வர்மன் தெற்கே திருமா மங்கை நோக்கி யாத்திரை கோஷ்டியுடன் புறப்பட்டான்.

கடில நதிக்கரையில் இருந்தது திருமா மங்கை புண்ணிய க்ஷேத்திரம். நாராயணப் பெருமாளும், நாராயணியும் விசேடம்! அங்கே பெருமாளுக்கு மோகினித் திருக்கோலம் அணிவிப்பது மிகப் பிரசித்தம். திருப்பாற்கடல் கடைந்த போது அமிருதம் உண்டாக, அமிருதத்தை தேவர் அசுரர்களுக்கு பங்கு போடும் நிலையில், பெருமாள் மோகினி உருவம் படைத்து, அசுரர்களை தம் அழகிலேயே மெய்மறந்து ஈடுபட்டிருக்கச் செய்து, அந்த மோகத்தைப் பயன்படுத்தி அவர்களுக்கு அமிருதம் வார்க்காமல், தேவர்களுக்கு மட்டிலும் வார்த்தார் என்பது கதை.

அதை நினைவுபடுத்துவதாய் இங்கே நாராயணருக்கு மோகினித் திருக்கோலம் அணிவிப்பதும், அவரை தோழிக் கிண்ணத்தில் ஏற்றி மோகினி நடை போட்டுக் கோயிலைச் சுற்றி வருவதும் பிரசித்தமானவை.

ஊரும் உலகமும் திரண்டு வரும்.

அதுவும் மோகினி நடை என்பது அந்தக் கோவிலுக்கே பிரசித்தம். வாகனத்தைத் தோளில் ஏற்றி நர்த்தனம் செய்து எழுந்தருளிவிக்கும்போது பெருமாள் நிஜத்தில் ஒய்யார நடையிட்டு வருவது போல் தோன்றும்.

பெருமாளுக்கு அனுசரணையாக நூறு தேவரடியார்கள் வெவ்வேறு ஊர்களிலிருந்து திரண்டு அவர் முன்னே சின்னச் சின்ன மலர்கள்; போலக் கொத்து சேர்ந்து, சிருங்கார, அலங்கார, நிருத்தியங்கள் செய்து கொண்டு போகும் காட்சி.

அத்தனை மிருதங்கங்களும், அத்தனை வாய்ப்பாட்டுக் காரர்களும் சேர்ந்து ஒரு போல ஆட, ஜனம் அத்தனை பேர்களும் இமையாது அசையாது சித்திரமிட்டாற் போலச் சொக்கி நிற்பார்கள்.

இத்தகைய விசேஷங்கள் நிறைந்த திருத்தலத்திற்குப் பொம்மராஜுப்பாளையம் ராணியார் போக விரும்புகிறார், போகப் போகிறார், நாளை கிளம்புகிறார் என்று வரிசையாகச் செய்திகள் தண்டோரா மூலம் கேட்டன.

எனவே பத்தாம் நாள் காலையில் மூடு பல்லக்குகளும், இருநூறு அடியார்களுமாய் புறப்பட்ட யாத்திரை கோஷ்டிக்குத் தலைவனாகக் கிளம்பினான் வர்மன்.

''கோவிந்தா, கோவிந்தா'' என்ற நாமம் எங்கும் ஒலித்தது. பஜனை கோஷ்டி ஒன்று முன்னால் இனிமையாக ஒலித்துக் கொண்டு சென்றது.

"சமையல் கலையைப் பற்றி நான் எழுதின கட்டுரை பத்திரிகையிலே பிரசுரமாயிடுச்சு, படிச்சியா?"

"படிச்சேனே! உங்க சமையல்போலவே கட்டுரையும் உப்பு, சப்பில்லாமே இருக்கு!".



அதிகாலையில் புறப்பட்ட கோஷ்டி மத்தியானத்தைத் தாண்டியவாறே நாராயண வனத்தை அடைந்தது.

வனத்தை நெருங்கியது.

வர்மன் அப்போது இரண்டு ஒற்றர்கள் ஓடி வருவதைப் பார்த்து, கோஷ்டியை நிறுத்தி வைத்தான்.

கோஷ்டிக்கு முன்னால் ஒற்றர் அணி ஒன்று சாதுக்கள் வேடங்களில் தனித்தனி மனிதராகப் போய்க் கொண்டிருந்தது.

சாலையை மட்டுமல்லாது, சுற்றுப்புறங்களில் இறங்கி ஏதாவது விரோத நடமாட்டம் இருக்கிறதா என்று கவனித்து வந்தார்கள்.

இப்போது வந்த ஒற்றர் இருவரும், ஒரு சிறிய மராட்டி குதிரைப் படை, சாலைக்கு அருகில் தண்டு இறங்கி இருக்கிறார்கள் என்றும், அவர்கள் இப்போது புறப்பட்டுக் கொண்டு இருக்கிறார்கள் என்றும், போகும் திசை தெரியும் வரை காத்திருக்க வேண்டும் என்றும் கூறினார்கள்.

வர்மனின் யாத்திரை கோஷ்டியில் வரும் ஆண்கள் எல்லோரும் சுத்த வீரர்கள்.

சந்தர்ப்பத்திற்குவேண்டி புனிதயாத்திரை செய்யும் வைணவர்கள் போல் நாமதாரிகளாகத் தென்பட்டார்கள்.

வர்மன் தன் குதிரைச் சவுக்கை ஒரு முறை சொடுக்கி அனைவருக்கும் எச்சரிக்கை ஒலி கொடுத்து விட்டான்.

எல்லோரும் காத்திருக்கும் போது அருகிலுள்ள பல்லக்கிலிருந்து "வீரரே!" என்று குரல் கேட்டது.

திடுக்கிட்டு வர்மன் திரும்பிப் பார்க்க, முகத்தில் குறுநகைகள் வயிரம் போல் மினுமினுக்க, சிந்து மூடு திரைகளை விலக்கி அவனைப் பார்த்தாள்.

கோஷ்டியில் காவலர்கள் வருகிறார்கள். பல்லக்கில் பொக்கிஷம் மறைத்து வைக்கப் பட்டிருக்கிறது. அவை உள்ளே ராஜகுலப் பெண்கள் உடைதரித்த சாதாரணப் பெண்கள் வருகிறார்கள் என்று வர்மன் அறிந்திருந்தான்.

சிந்து வந்தது ஆச்சரியமாக இருந்தது.

சிந்து எப்போது பொம்மராஜுப்பாளையம் வந்தாள்? எப்போது இந்த கோஷ்டியில் கலந்து கொண்டாள் என்று தெரியாது.

எனவே அறியாத ஆச்சரியமுடையவனாய், அவளருகே சென்று, "எப்போது வந்தீர்கள் சிந்து! பார்க்கவில்லையே!" என்றான்.

"அவ்வளவு திறமையாக வேலை செய்கிறது எங்கள் உடன்படிக்கைக் குழு! நேற்று இரவு வந்தேன். இன்று கோஷ்டியில் சேர்ந்தேன்" என்றாள்.

"உண்மையில் திறமைசாலிகள்தான். நாம் புதுச்சேரிக்குப் பத்திரமாகப் போய்ச் சேருவோமா!" என்றான்.

"கவலையே வேண்டாம்! அன்று பொய்மான் காட்டில் பார்த்தீர்களே! அத்தனை வீரர்களும் நம்மை அங்கங்கே வழியில் பாதுகாத்துக் கொள்வார்கள்."

"அப்படியா? அவர்கள் எல்லோரும் இங்கே வந்து விட்டார்களா?"

"எல்லோரும் சாதுக்கள் வேடத்தில் இங்கே வந்துள்ளார்கள்! அங்கங்கே வந்து நம்மைக் கண்டு கொள்வார்கள்."

"அடேயப்பா! ஏற்பாடுகள் எல்லாம் பிரமாதமாக இருக்கிறதே!" என்று பூரித்துச் சொன்னான் வர்மன்.

"இன்னும் ஆறு மாதத்தில் பழைய நாயக்கர்கள், மதுரைக்கு வந்து விடுவார்கள். பாளையக்காரர்கள் அவரவர் பாளையங்களில் நிம்மதியாக இருப்பார்கள். வெள்ளைக்காரர் எல்லோரும் வெளியேறி ஓடிவிடுவார்கள். முதலில் பிரெஞ்சுக்காரர்களைத் துரத்துகிறோம். பிறகு இங்கிலீஷ்காரரைத் துரத்துகிறோம்."

கண்களில் பளிங்கு ஜொலிப்புடன் அவள் பேசினாள்.

வர்மனுக்கும் ஆச்சரியம் மனத்தில் கனத்தது.

ஆரம்பத்தில் உடன்படிக்கைக் குழுவைப் பற்றி அவன் அதிகம் நினைக்கவில்லை. ஐந்து பாளையக்காரர்கள் ஒன்றாகச் சேர்ந்து ஒரு காரியம் செய்ய மாட்டார்கள். இங்கே ஐம்பத்தாறு பேர் கூடி ஒரு காரியம் செய்வது பெரிய ஆச்சரியமாக இருந்தது.

சிந்து சொன்ன பிரகாரம் மட்டும் எல்லாம் நடந்தால்...?

வர்மனுக்குப் பெருமிதம் ஏற்பட்டது.

நாட்டில் ஏற்படவிருக்கும் பெரிய பெரிய மாறுதல்களுக்கு அவன் ஒரு முக்கிய கருவி

யாக இருக்கப் போகிறான்.

"திருமலைக்குப் போனீர்களாமே!" என்றான் சிந்து.

"ஆமாம்! கார்வேட் ராஜா அனுப்பித்தார். ஏழுமலையானைத் தரிசிக்கும் பேறு பெற்றேன். என் அதிர்ஷ்டமோ என்னவோ, அவரது பொக்கிஷத்தைப் பாதுகாப்பாகப் பின் தொடர்ந்து செல்லும் பொறுப்பும் எனக்குக் கிட்டியிருக்கிறது. பெருமையாக இருக்கிறது. ஆனால் சிந்து ஏன் நாம் ஒரு சுற்று வழியைப் பின்பற்றுகிறோம்?"

"எது சுற்று வழி?"

"திருப்பதிப் பணத்தைப் பிரெஞ்சுக்காரர்கள் கையில் கொடுத்து அவர்கள் மூலம் இங்கிலீஷ்காரர்களை அடிக்க விரும்புகிறீர்களே! அதைச் சொல்கிறேன்."

சிரித்தான்.

"அந்த வெள்ளையர்கள் கையாளும் வழியேதான். ஒருத்தருக்கு உதவி கொடுத்து இன்னொருத்தரை முடிப்பது. பிறகு உதவி வாங்கியவரைத் தாமே முடிப்பது. இந்த வழி இல்லாவிட்டால் நம்மாலே தனியாக எதுவும் சாதிக்க முடியாது."

"ஐம்பத்தாறு பாளையக்காரர்கள் சேர்ந்தால் கூடவா?"

"ஆமாம் வீரரே! வெள்ளையன் யுத்த முறை வெள்ளையனுக்குத்தான் தெரியும். எனவே வெள்ளையனால்தான் வெள்ளையனை முடிக்க வேண்டும்."

"திட்டம் பிரமாதம். நிறைவேற்ற ஆண்டவன் அருள் புரிய வேண்டும்."

அந்த நேரம் மேலும் இரண்டு ஒற்றர்கள் ஓடி வந்தார்கள்.

* * * * *

ஆர்க்காட்டுக் கோட்டைக்குள் நிலைமைகள் மோசமாகி வந்தது.

உள்ளே உணவுப் பஞ்சத்தில் ஈடுகொடுக்காமல் பலர் நோய்வாய்ப்பட்டார்கள்.

பங்கிடப்பட்ட உணவு போதாமலே பலருக்கு உடல் பலவீனமாகியது.

சிப்பாய்களிடையே இருந்த உற்சாகம் குன்றி விட்டது.

ஒருவரைப் பார்த்து ஒருவர் புன்னகை செய்யக் கூட வலுவில்லாது இருந்தார்கள்.

பேச்சுக்கள் அறவே நின்று விட்டன. அவரவர் தத்தம் தனிமையில் இருக்கத் தொடங்கினார்கள்.

சிலருக்குக் கோட்டையைத் திறந்து ஓடி விடலாமா என்று எண்ணம் தோன்றியது.

இனி இங்கிலீஷ்காரரை நம்பிப் பிரயோஜனமில்லை. கடைசி வரை பட்டினி கிடக்க வைத்தே சாக அடித்து விடுவார்கள் போல இருந்தது.

உண்மையில் கோட்டைக்குள் ஒரு சுடுகாட்டு அமைதி கல்போல் இறங்கி இருப்பதை எல்லோரும் உணர்ந்தார்கள்.

ராபர்ட் கிளைவ் அதிகமாக உணர்ந்தான்.

அந்த மாலை நேரத்தில் சோகத்தோடு கோட்டை மேலே நடந்தான்.

சற்று எட்டத்தில் ஒரு சிப்பாயைப் பார்த்தான். அவன் செய்யும் செயலைப் பார்த்துத் திடுக்கிட்டு ஓடினான்.

(தொடரும்)

---

அடுத்த வாரம்

ஆம்னிபஸ் அவதிகள்

புகைப்படம்: எட்வர்ட் (கூபர்)

# அபய ஹஸ்தம்

## ஹேமா ஆனந்ததீர்த்தன்

"இந்த மாதிரியெல்லாம் ஏன் எழுதறேள்" என்றோ "இது ரொம்பத் தப்பு" என்றோ சொல்லிவிட்டால்? தலைகுனிவாகப் போய்விடுமே!

படபடக்கும் இதயத்துடன் காத்திருந்தார்.

---

அன்புடையீர்,

வணக்கம்.

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் எமது வேண்டுகோளை ஏற்று அனைத்து இந்தியத் தமிழ் எழுத்தாளர் சங்க உறுப்பினர்களைச் சந்தித்து அருளாசி வழங்க அன்புடன் இசைந்துள்ளார்கள்.

மார்ச் மாதம் 31—ந்தேதி மாலை 3 மணிக்கு புரசைவாக்கம் தர்மபிரகாஷ் கல்யாண மண்டபத்தில் சந்திப்புக் கூட்டம் நடைபெறும்.

தலைவர்.

குறிப்பு: தங்கள் நூல்களைக் காணிக்கையாக சுவாமிகளுக்குச் சமர்ப்பிக்க விரும்புபவர்கள் கொண்டு வரலாம். எழுத்தாளர் சங்க உறுப்பினர் மட்டுமே கூட்டத்திற்கு வர வேண்டுமென்பதில்லை. தங்களைப் போன்ற சிறந்த எழுத்தாளர்களை அழைப்பதில் மகிழ்ச்சியடைகிறேன். தங்கள் வருகையை அன்புடன் எதிர்பார்க்கிறேன்.

தலைவர்.

காலைத்தபாலில் தனக்கு வந்திருந்த இந்தக் கடிதத்தைக் கையில் வைத்துக்கொண்டு எழுத்தாளர் சந்தியா தேவநாதன் ஆழ்ந்த யோசனையில் இருந்தார்.

அவர் எழுத்தாளர் சங்கத்தில் உறுப்பினர் அல்ல. ஆனாலும் சிறந்த எழுத்தாளர் என்ற அடைமொழியுடன் அழைக்கப்பட்டிருக்கிறார்.

இதில் கண்டிப்பாக ஏராளமான எழுத்தாளர்கள் கலந்து கொள்வார்கள் என்பது நிச்சயம். ஆனால் தன்னால் இந்தக் கூட்டத்தில் கலந்து கொள்ள முடியுமா?

சங்கத் தலைவர் ஒவ்வொரு எழுத்தாளரையும் தனித்தனியாக சுவாமிகளுக்கு அறிமுகம் செய்து வைப்பார்.



சுவாமிகள் தமிழ்ப் பத்திரிகைகள் எல்லா வற்றையும் படிப்பதாகவும், பல எழுத்தாளர் களை அவருக்கு நேர்முகமாகப் பரிச்சயம் உண்டு என்றும் சந்தியா தேவநாதன் கேள் விப்பட்டிருந்தார்.

அப்படியானால் தன் பெயரையும் அவர் பத்திரிகைகளில் பார்த்திருக்கவேண்டும். தான் பெண் பெயரில் எழுதும் ஆண் எழுத் தாளன் என்பதையும் அவர் அறிந்திருக்க வேண்டும். இவ்வாறு பெண் பெயரில் எழு தும் ஆண் எழுத்தாளர்களைச் சில வாசகர்க ளும், சில சக எழுத்தாளர்களும் விமர்சிப்ப தையும் அவர் அறிந்திருக்கக் கூடும்.

இதுபற்றி சுவாமிகள் என்ன கருத்துக் கொண்டிருப்பார்?

அவர் இதுபற்றி கூட்டத்தில் ஏதாவது கண்டிப்பது போலச் சொல்லிவிட்டால் என்ன செய்வது?

அவர் அப்படிப் பயப்பட்டதற்குக் கார ணம் சமீபகாலமாக அவர் எழுதி வந்த கதைகளெல்லாம் அவர் மனத்திற்கே சம்மத மில்லாமல், பணம் சம்பாதிப்பதற்காகவே எழுதப்பட்ட கதைகள். கொலை, கொள்ளை, கற்பழிப்பு, சோரம் போதல், மனைவிக்குத் துரோகம் செய்யும் கணவன் — இவைக ளையே கதைகளின் மையக் கருத்துக்களாக வைத்துப் பெண்களின் அங்க வர்ணனைகளை யும், படுக்கையறைக் காட்சிகளையும் ஒளிவு மறைவில்லாமல்பச்சைபச்சையாகவிவரித்து எழுதப்பட்டவை.



முப்பது, முப்பத்தைந்து வருடங்களாக, நல்ல கதைகளையே எழுதி வந்த அவருக்குப் பெயரோ, பரிசோ, பணமோ எதுவுமே பெரி தாகக் கிடைக்காமற் போகவே தான், ஒரு நாள் திடீரென்று இவ்வாறு சுவாதி என்ற தன் பழைய புனைபெயரைத் தூக்கி எறிந்து விட்டு சந்தியா தேவநாதன் என்ற புதுப் பெயரைச் சூட்டிக் கொண்டார்.

அவர் பெயர் தேவநாதனும் இல்லை. அவ ரது மனைவியின் பெயர் சந்தியாவும் இல்லை. கதைகள் எழுதுவதற்காகவென்றே அவர் வைத்துக் கொண்ட பெயர் அது.

அந்தப் பெயரில் அவர் எழுதிய முதல் நாவல் ''காளை, கன்னி, கட்டில்'' தொடர் கதையாக வாரம் ஆறு லட்சம் பிரதிகள் விற்கும் பிரபல வாரப் பத்திரிகையில் வெளி வந்த போது அந்தக் கதையையும் அவரையும் பாராட்டி நூற்றுக் கணக்கில் ஒவ்வொரு வாரமும் கடிதங்கள் வரத் தொடங்கின. கதை ஒன்றும் பிரமாதமான திருப்பங்கள், சஸ்பென்ஸ், பாத்திரப் படைப்புகள் கொண்டதல்ல. கல்லூரியில்படித்துக்கொண் டிருக்கும் ஒரு பெண் — பதினெட்டு வயதுப் பெண் — அவளை விட இரண்டு வயது மூத்தவ னை ஒரு இளைஞனுடன் வீட்டை விட்டு ஓடிப் போய் முசாபரி பங்களாவில் தன்னை அவனுக்குத் தந்து, பிறகு இரண்டு குடும் பத்துப் பெரியவர்களின் விருப்பத்துக்கும் எதிராக அவனை மணந்து கொள்கிறாள். அவ்வளவுதான்.

இந்தக் கதையை முப்பது வாரங்களுக்கு ஓட்டி வாசகர்களின் பாராட்டுதல்களைப் பெறக் காரணமாக இருந்தவை அந்த இளம் காதலர்களின் சுவையூட்டும் உரையாடல் களும், காதல் விளையாட்டுக்களும்தான்.

அந்தத் தொடர்கதையின் வெற்றி அவரது எழுத்துலக வாழ்க்கையில் ஒரு திருப்பமாக அமைந்தது.

மற்ற பத்திரிகைகள் அவரிடம் கதை கேட் கப் போட்டியிட்டன. ''காளை, கன்னி, கட் டில்'' போன்ற கதையே வேண்டும் எனவும் அவை அவரை வேண்டிக் கொண்டன.

''காளை, கன்னி, கட்டில்'' நூல் வடிவில் வெளியாகி ஐயாயிரம் பிரதிகள் மூன்றே மாதங்களில் விற்றுத் தீர்ந்தன.

எனவே சந்தியா தேவநாதன் தமது பழைய கோட்பாடுகளை மறந்தார். 'எழுத்துக்கு ஒரு நோக்கம் இருக்க வேண்டும்' என்பதை அவர் இப்போதும் ஒப்புக் கொண்டார். ஆனால் அந்த நோக்கம் சமுதாய மேம்பாடு, சமு தாயப் பிரச்சினை, என்றெல்லாம் இல்லாமல் பணமும், புகழும் ஈட்டுதல் என்று மாற்றிக் கொண்டார்.



''பாட்டி! ஐந்திலே வளையாதது ஐம்பதிலே வளையாதுன்னு சொல்றுங்களே, நீங்க மட்டும் எப்படி வளைஞ்சீங்க?''

அடுத்ததாக அவர் எழுதிய தொடர்கதை ஆண்மையை இழந்துவிட்ட ஒரு முப்பத்தெட்டு வயதுக்காரனைப் பற்றியது. அதை மனோதத்துவத்தின் அடிப்படையில், 'விஞ்ஞான ரீதியாக எழுதுவதாக ஒரு 'பாவ்லா' காட்டி இழந்த ஆண்மையை அவன் மீண்டும் பெற வேண்டுமானால் மனைவியல்லாத ஒரு பெண்ணிடம் அதுவும் அயலான் மனைவி ஒருத்தியிடம் உடலுறவு கொண்டால் சாத்தியமாகலாம் என்ற கருத்தை மையமாக வைத்து எவ்வளவு கொச்சையாகவும், பச்சையாகவும் எழுத முடியுமோ எழுதினார். அந்தத் தொடர்கதையை வெளியிட்டதனால் அந்தப் பத்திரிகையின் சர்க்குலேஷன் மளமளவென்று ஏறியது. அதனால் மகிழ்ச்சியடைந்த அப்பத்திரிகை அவருக்கு வழக்கமாக மற்றவர்களுக்கு அளிப்பதைப் போல மூன்று மடங்கு சன்மானத்தை அளித்தது.

இந்தச் சமயத்தில் தான் தமிழில் மாத நாவல்கள் தோன்ற ஆரம்பித்தன. அத்துடன் சந்தியா தேவனாதனின் அதிர்ஷ்டமும் விறுவிறுவென்று ஏறத் தொடங்கியது. ஒவ்வொரு மாதமும் அவருடைய நாவல் வெளி வரலாயிற்று. சில மாதங்களில் இரண்டு மூன்று நாவல்களும் வெளிவந்தன.'

சினிமா நடிக, நடிகைகளிடம் கால்ஷீட் வாங்குவது போல மாத நாவல் வெளியிடுவோர் சந்தியா தேவனாதனுக்கு முன் பணம் கொடுத்து நாவல் 'புக்' செய்து கொண்டார்கள்.

அவர் தத்தளித்தவாறு உட்கார்ந்திருந்த போது அவர் மனைவி அங்கே வந்து சேர்ந்தாள்.

''என்னமோ கடுதாசி வந்தாப்புல இருக்கே? யார்கிட்டேயிருந்து?''

கையில் வைத்திருந்த கடிதத்தை மனைவியிடம் கொடுத்தார்.

அதைப் படித்துப் பார்த்துவிட்டு அவள் முக மலர்ச்சியுடன், ''போயிட்டு வாங்கோ. ஊருல ஒருத்தொருத்தர் பெரியவாளைப் பார்க்க முடியுமா, ரெண்டு வார்த்தை அவரோட பேச முடியுமான்னு பறக்கறா; இந்த மாதிரி சான்ஸ் எல்லோருக்கும் கிடைக்குமா? போய் நமஸ்காரம் பண்ணிட்டுப் பிரசாதம் வாங்கிண்டு வாங்கோ. காமாட்சி பட்டமும் குங்குமப் பிரசாதமும் கொடுப்பார் பெரியவாள்.''

தம்முடைய மனப் போராட்டத்தை அவளிடம் சொன்னால், ''பார்த்தேளா, இதுக்குத்தான் நான் முட்டிண்டே இருக்கேன், இந்த மாதிரி அசிங்க அசிங்கமா கதைகள் எழுதாதீங்கோன்னு; நீங்க கேக்கறதில்லே. இப்ப பெரியவாளைப் போய்ப் பாக்கறதுக்கே உங்களுக்குக் கூச்சமாயிருக்கு. என்னமோ சொல்லுவாளே தெய்வ சாந்நித்யம் இருக்கற இடத்துல எதுவோ வரப் பயப்படும்னு. அந்த மாதிரி ஆயிடுத்து'' என்று இதுதான் சமயமென்று தாக்க ஆரம்பித்து விடுவாள்.

''சரி, போயிட்டு வரேன்,'' என்றார்.

* * * * *

தர்மபிரகாஷ் மண்டபத்தில் அன்று இரண்டரை மணிக்கெல்லாம் கூட்டம் கூடி விட்டது.

கூட்டத்திற்குவந்திருந்தஎழுத்தாளர்களில் பலரும் தத்தம் கைகளில் தாங்கள் எழுதிய ஒன்றிரண்டு புத்தகங்களையாவது வைத்துக் கொண்டிருந்தனர் — சுவாமிகளுக்குச் சமர்ப்பிப்பதற்காக.

ஒருவர் ''புனித யாத்திரை'' என்று தாம் எழுதிய ஒரு பிரயாண நூலையும், ''கற்பகாம்பாள் தோத்திர மாலை'' என்ற கவிதை நூலையும் வைத்திருந்தார்.

சந்தியா தேவனாதனுக்கு இவைகளையெல்லாம் பார்க்கப் பார்க்க ஒரு தாழ்வு மனப்பான்மை தோன்றியது. கூட்டம் ஆரம்பிப்பதற்குள்ளாகப் புறப்பட்டுப் போய்விடலாமா என்று கூட யோசித்தார். மறுபடியும் அதற்கும் மனம் இணங்கவில்லை.

சரியாக மூன்று மணிக்கு ஜய ஜய சங்கர ஹர ஹர சங்கர என்ற கோஷங்களைத் தொடர்ந்து ஆசாரிய சுவாமிகள் மலர்ந்த முகத்துடன் உள்ளே பிரவேசித்ததும் கூடியிருந்தவர் அனைவரும் எழுந்து நின்று கை கூப்பினர். சிலர் தரையைத் தொட்டு வணங்கவும் செய்தனர்.

பெரியவர் தமக்கென இடப்பட்டிருந்த ஆசனத்தில் சென்று அமர்ந்து எல்லோரையும் உட்காரச் சொல்லிக் கையை அசைத்

# தேநீரும் விருந்தோம்பலும் ஸாகர் ஸ்கிம் மில்க்கும்

உங்கள் இல்லத்திற்கு வருகை தரும் நண்பருக்கு முதலில் வழங்குவது எது ? நல்வரவு என்று சொல்லும் புன்னகையும் நல்லதொரு கோப்பை தேநீரும் தானே ! அது வழி வழியாய் வரும் உங்களுடைய கலாசாரத்தின் பிரதிபலிப்பு.

இம்மாதிரி சமயங்களில் பால்பாட்டில் காலியான பரிதவிக்கும் நிலையில் நீங்கள் இருந்தால் ? உடன் புதிய பால் கிட்டாத நிலையானாலோ ?

ஸாகர் ஸ்கிம் மில்க் பவுடர் உங்கள் பாரம்பரிய விருந்தோம்பலை நீங்கள் பேண உதவுகிறது. சிக்கனமாக, விரைவாக, எளிதாக. இனிப்புகளுக்கும் புட்டிங்கு களுக்கும் இது ஈடு இணையற்றது.

# ஸாகர்

## ஸ்கிம் மில்க் பவுடர்

**கொழுப்பு இல்லாத பாலின் உன்னதமான குணங்கள் உண்டே இதில்.**

புதிய மணங்கமழும் பேக்கில்




ASP/SMP/5/84R



விற்பனைக்கு விடுப்போர்:
குஜராத் கோ-ஆப்பரேடிவ் மில்க் மார்க்கெட்டிங் பெடரேஷன் லிமிடெட், தபால் பெட்டி எண் 10, ஆனந்த் 388 001, குஜராத்.

த்தும் எல்லோரும் உட்கார்ந்தாாகள்.

தலைவர், தான் ஒவ்வொரு எழுத்தாளரையும் சுவாமிகளுக்கு அறிமுகப்படுத்துவதாகவும், அப்படி அறிமுகப்படுத்தப்பட்டவர் சுவாமிகளிடம் வந்து பிரசாதம் பெற்றுக் கொண்டு 'போக வேண்டுமென்றும் கூறி அறிமுகப் படலத்தைத் துவக்கினார்.

தலைவர் ஒவ்வொரு எழுத்தாளரின் பெயரைச் சொல்லும் போதும் பெரியவர், "ஓ, எனக்குத் தெரியுமே" என்றோ, "படிச்சிருக்கேன்" என்றோ, "பேஷ், நல்ல காரியம். தொடர்ந்து செய்யணும்" என்றோ எதையாவது பொருத்தமாகச் சொல்லிப் பிரசாதம் கொடுக்கலானார்.

அதைக் கண்டு சந்தியா தேவனுதனுக்கு உதறலெடுத்தது. தன்னுடைய முறை வரும் போது பெரியவர் என்ன சொல்லி விடுவாரோ என்ற பீதி அவருக்கு ஏற்பட்டது.

'இந்த மாதிரியெல்லாம் ஏன் எழுதறேன்?' என்றோ, 'இது ரொம்ப தப்பு' என்றோ சொல்லி விட்டால்? தலை குனிவாகப் போய் விடுமே.

படபடக்கும் இதயத்துடன் காத்திருந்தார்.

சங்கத் தலைவர் சைகை காண்பித்து விட்டு, "சந்தியா தேவனுதன் கற புனைபெயர்ல எழுதுறார். சொந்தப் பெயர் குமாரசாமி," என்று அறிமுகப்படுத்தினார்.

சுவாமிகள் கலகலவென்று சிரித்தபடி "அப்படியா அது? அர்த்தநாரீசுவரர்!" என்று கூறியதும் லேசாக சிரிப்பலை எழுந்தது.

'அப்பாடா! இத்தோடு போயிற்றே' என்று நினைத்தபடி சந்தியா தேவனுதன் சுவாமிகளை நோக்கிச் சென்றார்.

சுவாமிகளை நெருங்குவதற்கு மூன்றடி இருக்கும் போது கீழே தரையில் விரித்திருந்த ஜமக்காளம் சுருண்டு கொண்டிருந்ததைக் கவனிக்காததால் இடறிக் குப்புற விழுந்து விட்டார்.

சுவாமிகள் பிரசாதம் கொடுக்கும் போது, 'பரவாயில்லே. இடறிட்டாப்பல இருக்கு. யாருக்கும் அது சகஜம். இனிமே ஜாக்கிரதையா இருக்கணும்' என்று சொன்னார்.

அந்த வார்த்தைகளில் பெரியவர் எதையோ சொல்லாமல் சொல்லிவிட்டார் என்பதை சந்தியா தேவனுதன் — இல்லை, குமாரசாமி உணர்ந்து கொண்டார். அதன் பிறகு சந்தியா தேவனுதனின் கதைகள் வெளிவரவில்லை. 'சுவாதி'யின் கதைகள் மீண்டும் வெளிவரத் தொடங்கின.

---

# ஸ்பாட்லைட்

சென்னை நகரம் சீரழிந்து கிடக்கிறது. எங்கு பார்த்தாலும் தண்ணீர்ப் பஞ்சம். ஓட்டு போட்ட மக்கள் வீட்டுக்கு வந்து திட்டுகிறார்கள்.

— இ.காங்கிரஸ் எம்.எல்.ஏ. வேணுகோபால்.

பாண்டியன் எப்போதும் நியாயத்தையே நிலை நாட்டுவான். அதனால்தான் நான் வீரனாக இருக்கிறேன். சிலருக்குப் பாண்டியன் என்று பெயர் இருந்தாலும் அப்படி இருக்க மாட்டார்கள்.

— சபாநாயகர் பி. எச். பாண்டியன்.



சபாநாயகர்

எங்கள் பகுதி (திருவண்ணாமலை)யில் குடிநீர் வடிகால் வாரியத்திற்குச் செலவு செய்ய ஒரு கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டது. இதில் நாற்பது சதவீதம்தான் செலவு செய்யப்பட்டது. மீதியை அதிகாரிகளும், ஒப்பந்தக்காரர்களும் சாப்பிட்டு விட்டார்கள்.

— இ. காங்கிரஸ் எம்.எல்.ஏ. ரவீந்திரன்.

இந்த (திருவல்லிக்கேணி) தொகுதியில் போட்டியிட்ட எங்கள் (அ.இ.அ.தி.மு.க) ஆதரவு பெற்ற வேட்பாளரான ஹாஜா ஷெரீப்பை வெற்றி பெறச் செய்யாமல், தி.மு.க. ஆதரவு பெற்ற வேட்பாளரையல்லவா நீங்கள் வெற்றி பெறச் செய்தீர்கள். இந்த நிலையில் உங்களுக்கு எப்படி நாங்கள் நன்மை செய்ய முடியும்?

— குடிசை மாற்று வாரியத் தலைவர் என். வி. என். செல்வம் (திருவல்லிக்கேணியில் நடந்த ஒரு பொதுக் கூட்டத்தில்)

கல்கத்தா பல்கலைக் கழகத்தில் யார் என்ன செய்து கொண்டிருக்கிறார்கள் என்பது உண்மையில் ஒருவருக்குமே தெரியாது!

— கல்கத்தா பல்கலைக் கழகத்தின் துணை வேந்தர் சந்தோஷ் குமார் பட்டாச்சாரியா.

படம்: சுபா

# “அந்த விஷயத்தில் பெரியார் கட்சி!”

* பி. கே. ஜெயராமன், சென்னை—33.

**? விஞ்ச ஆர். எஸ். எஸ்.ஸையும், இந்து முன்னணியையும் சாடியிருக்கிறீர்களே? தி.க. வுடன் ஆர். எஸ். எஸ். இந்து முன்னணியை இணைத்துப் பேசுவது எப்படி பொருந்தும்?**

! ஆர். எஸ். எஸ்., இந்து முன்னணி இவற்றின் பலமும் நிறைகளும் எனக்குத் தெரியாதவையல்ல. பலவீனங்களையும், குறைகளையும் அறிவேன். கேள்வி, 'தி. க.வைத் தடை செய்தால் என்ன?' என்பது. அப்படி தடை செய்வதெனில் வேறு பல ஜாதி, மத அடிப்படை அமைப்புக்களையும் தடை செய்ய நேரிடும் என்பது பதில். முஸ்லீம் லீக், அகாலி தளம், பிராமணர் சங்கம், ஹிந்து முன்னணி, ஆர். எஸ். எஸ். போன்றவற்றை அனுமதித்து திராவிடர் கழகத்தை மட்டும் தடை செய்வது என்பது ஜனநாயகத்தில் சாத்தியமல்ல. ஆஸ்திகத்தைப் பரப்ப, ஹிந்து அல்லது கிறிஸ்துவ மதத்தைப் பரப்பப் பிறருக்கு உரிமை உண்டெனில் நிரீசுவர வாதத்தைப் பரப்ப தி. க. வுக்கு உரிமை மறுக்கப்பட இயலாது.

* வி. சௌரிராஜன், ஸ்ரீரங்கம்.

**? என்னுடைய தேசபக்தியையும் ஒற்றுமை உணர்வையும் சந்தேகிக்கிற யோக்கியதை இப்போது பிரதமராக இருப்பவரின் பாட்டனுருக்கும் கிடையாது; தாயாருக்கும் கிடையாது என்கிறுரே திரு சந்திரசேகர் — இது பற்றி....?**

! இப்போது பிரதமராக இருப்பவருக்கும் கிடையாது என்று சேர்த்துச் சொல்கிறோம்.

* மு. சிவஞானமுருகன், ஸ்ரீவைகுண்டம்.

**? சமீபத்தில் நெல்லை மாவட்டத்தில் ''முண்டம்'' வருகிறது என்ற வதந்தி நிலவி, பெரும்பாலான வீடுகளில் வேப்பிலை வைத்தார்களே....?**

! இதுபோன்ற விஷயங்களில் நான் தந்தை பெரியார் கட்சி.

* மேஜர்தாசன், ஈரோடு.

**? ஹெல்மெட்டின் மகத்துவம் பற்றிக்கூறுங்கள்?**

! உயிர் காக்கும் உத்தமன். சில மாநிலங்களில் பின் ஸீட்டில் அமர்ந்து செல்வோருக்கு ஹெல்மெட் கட்டாயமாக்கப்படவில்லை. இது தவறு. விபத்து என்றால் பில்லியனில் அமர்ந்திருப்பவருக்கு மண்டைக் காய ஆபத்து அதிகம். குழந்தைகளுக்குத் தேவையில்லை என்று தமிழக அரசு விலக்களித்துள்ளது. குழந்தைகளை ஸ்கூட்டரில் அழைத்துப் போவதைத் தவிர்ப்பது நலம். ஸ்கூட்டர் இருவருக்கு மட்டுமே ஏற்பட்டது. மற்றபடி ஹெல்மெட், ஜோக்சித்திரக்காரர்களுக்கு பேருதவி செய்து வருகிறது. அவற்றுள் அதிகமாக அனுபவித்தது எக்ஸ்பிரஸ் நாளிதழில் வெளியான ''பாலா'' கார்ட்டூன். மோட்டார் சைக்கிளை வெளியே நிறுத்திப் பூட்டி விட்டு உள்ளே போகும் போது குழந்தை போல் ஹெலமெட்டை மடியில் வைத்துக் கொண்டு பேச நேர்வதுதான் தொல்லை. அதுவும் பழகி விட்டால் சரியாகி விடும்.

* எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

**? தீயில் எரிந்து சாம்பலாகிவிட்ட பழம் பெருமை வாய்ந்த மூர்மார்க்கெட் விபத்து பற்றி...?**

! வியாபாரிகளுக்கு நேர்ந்த கஷ்ட நஷ்டம் தவிர, ஒரு பழமையான கட்டிடம், நாம் எத்தனையோ தடவை விளையாட்டுச் சாமான் முதல் விஞ்ஞானப் புத்தகம் வரை வாங்க வசதி அளித்த கட்டிடம், எதுவும் வாங்காத போது கூட சுற்றிச் சுற்றி வருவதிலேயே நாம் சுகம் கண்ட அலங்கார மண்டபம், சென்னைக்கு ஒரு 'லேண்ட் மார்க்' ஆக விளங்கிய கம்பீரக் காட்சி அழிந்து தரை மட்டமாகியதில் ஏதோ நெருங்கிய உறவினரை இடுகாட்டில் சுட்டெரித்து விட்டு வந்த துயரத்தைத்தான் அளிக்கிறது. தீ விபத்தைத் தவிர்ப்பதில் நாம் போதிய கவனம் செலுத்துவதில்லை என்பதையும் தீப் பிடித்தால் விபரீதமாகுமுன் அதை அணைக்க நம்மிடம் போதிய வசதிகள் இல்லை என்பதையும் மீண்டும் ஒரு முறை நிரூபித்த நிகழ்ச்சி.







இதனுலெல்லாம் மனம் கனத்துப் போய் இருக்கும்போது இடையே தாங்க முடியாத சிரிப்பையும், தோற்றுவித்து விட்டது கலைஞர் பேச்சு: சென்ட்ரல் ரயில் நிலையத் துக்கு விஸ்தரிப்புக்கு இடம் வேண்டும் என் பதால் வேண்டுமென்றே கொளுத்தி விட்டு விட்டு விபத்து என்று கதை கட்டி விட்டார் களாம்! அ. தி. மு. க. ஊழியர்களே தீ வைத்து விட்டார்கள் என்றும் முரசொலி முழங்குகிறது!

* வேல். விஸ்வகுமார், சென்னை—33.

**? வாத்தியாரே! செக்ஸ் படங்களில் கிக் அதிகமா? செக்ஸ் கதைகளில் கிக் அதிகமா?**

! இரண்டையும் விட விவகார சினிமாக் களை எடுத்து விட்டு அகப்பட்டுக் கொள்கிற வர்களைப் பற்றிப் பத்திப் பத்தியாக வரும் செய்திகளில் அதிக கிக்!

* எஸ். ஆரோன் பிரபு, திருச்சி.

**? நாட்டின் பொருளாதாரம் சீர்படத் தேவை பொருளாதார நிபுணர்களா? திறமை யான அரசியல்வாதிகளா?**

! ஏதோ மூடப் பிடிவாதத்துடன் உளுத் துப் போன கொள்கையைப் பிடித்துக் கொண்டிராமல் பிரத்யட்ச நோக்குடைய, பொருளாதாரம் தெரிந்த அரசியல்வாதிகள்.

* வி. ஏ. ஜெய்பாஸ்கர், திருச்சி.

**? நீங்கள் விரும்புவது போல் லாட்டரி சீட்டு ஒழிக்கப்பட்டு விட்டால், அதனுல் வாழ்க்கையை ஓட்டிக் கொண்டிருக்கும் ஏரான மக்கள் கதி?**

! இந்த வாதம் பொருந்தாது. முன்பு மது விலக்கு அமலான போதும் இப்படி ஒரு வாதம் கிளம்பியது. நல்ல பொருளாதாரக் கொள்கைகளைக் கையாண்டு நாட்டில் தொழில் வளமும் வேலை வாய்ப்பும் பெரு கச் செய்வதுதான் நோக்கமாக இருக்க வேண்டுமே தவிர, லாட்டரி சீட்டின் மூலம் அரசு வேலை வாய்ப்பைப் பெருக்குவது முதல் தர மோசடி.

* ஜி. ராஜசேகர், வலங்கைமான்.

**? அரசு ஊழியர்களுக்கு எம். ஜி. ஆர். வழங்கியுள்ள சம்பள உயர்வு பற்றி....?**

! சத்துணவோ அல்லது சம்பள உயர்வோ எதுவானுலும் எம். ஜி. ஆர். வழங்கியதாகக் கூறுவது அரசியல். உண்மையில் வழங்கு வது மக்கள்தான். சம்பள உயர்வையும் மக் கள்தான் தாங்குகிருர்கள்; அதன் விளை வான விலைவாசி உயர்வையும் அவர்கள் தான் தாங்குகிருர்கள். மறுபடி சம்பள உயர்வை அவர்களேதான் கொடுக்கப் போகிருர்கள்!

* பா. மதிமணியன், மணப்பாறை.

**? இவ்வளவு தூரம் நாகரீகம் பெருகியும் பல தாய் தந்தையர் பெண்களைக் கைதிகளாக நினைத்து வீட்டுக்குள் அடைத்து வைக்கிருர் களே?**

! எல்லாம் இந்த 'கமன்' களுக்குப் பயந்து கொண்டுதான்!

* மு. மதிவாணன், அரூர்

**? ஜெயலலிதா சக்ஸஸ்ஃபுல் உமனுக விளங்கி வருவதற்குக் காரணம் அவருடைய புத்தக அறிவுதான் என்று நடிகை லட்சுமி சொல்லியிருக்கிருரே...?**

! அடடா! லட்சுமியைப் புத்திசாலி என்றல்லவா நினைத்திருந்தேன்!

* ரூ 10 பரிசு பெறுபவர்:

ஜி. ராஜசேகர்,
வளையமாபுரம்,
வலங்கைமான்,
612 804.

# கற்பூர தீபம்

பழைய சினிமாக் கதைகளை சலவைக்குப் போட்டு புது சாயம் தோய்த்து வியாபாரம் பண்ணுவது சமீபத்திய தந்திரம் போலும்.

இரண்டு பெண்டாட்டிக்காரன் கதை என்றாலே கலவையான சம்பவங்களுக்குக் கொள்ளை வாய்ப்புத் தான். சிவகுமார் அதி கவனத்தோடு அந்த வாய்ப்புக்களைக் கைப்பற்றிக் கொண்டிருக்கிறார்.

அமைதியான குடும்பம். அன்பான கணவன். வெகு அன்பான மனைவி. எல்லாம் இயல்பாய் ஓடிக் கொண்டிருக்கையில் ஒரு தந்தி வந்து காரியத்தைக் கெடுக்கிறது.

எப்பொழுதோ குறுக்கிட்ட "ராதா" மறுபடியும் வருகிறாள் என்றதும் சிவகுமார். அரைநொடியில் தீர்மானித்து சின்ன வீடு செட்டப் செய்கிறார். டாணென்று நேரத்தோடு வீடு திரும்பிக் கொண்டிருந்தவர் கொஞ்சம் கொஞ்சமாய் லேட்டாய் வர ஆரம்பிக்கிறார். 'என்னங்க அஞ்சு மணிக்கு வரேன்னு சொல்லிட்டு இவ்வளவு லேட்டு?' என்று சுஜாதா கேட்டதும் 'திடீரென்று பார்ட்னர் வந்து விட்டான்' என்று சிவகுமார் சமாளிப்பதும். பின்னால் 'அவன் வெறும் ஸ்லீப்பிங் பார்ட்னர் என்று வழிவதும் நறுக் வசனங்களோடு சேர்த்தி. அதற்காக 'உங்க வீடு கோயில் மாதிரி' என்று அம்பிகா சொல்ல, 'அப்ப நீ கும்பிடற தெய்வம் இங்க தான் இருக்குன்னு சொல்லு' என்று சுஜாதா சொல்வதெல்லாம் ரொம்பவும் ஓவர்.

கலகலப்பிற்காக என்று எடுத்துக் கொண்டால் சிவகுமாரின் பிறந்த நாளை இரண்டு மனைவிகளுமாய்க் கொண்டாடுவதை மறக்க முடியாது. ஆளாளுக்கு காரியரில் ஏகப்பட்டதை அனுப்பி வைக்க, சிவகுமார் இரண்டையுமே கவுண்டமணியிடம் தள்ளி விட்டு. நிம்மதி தேடுகிறார். ஃபோன் வருகிறது இரண்டு பெண்டாட்டிகளிடமிருந்தும். அவர்கள் அனுப்பாத அயிட்டங்களைப் பாராட்டி விட்டு சிவகுமார் முழிப்பது சுகம். கோயிலில் அவசர அவசரமாய் அர்ச்சனைகள் செய்து விட்டு சமாளிக்கும் நேரம். அர்ச்சகர் 'மூணாவது பூஜை எப்போ?' என்று கேட்குமிடமும் கலகலப்பு.

என்னவோ கடமைக்காகத் தான் அம்பிகாவை ஏற்றுக் கொண்டதாய் சிவகுமார் கதை பண்ணுகிறார். இரண்டு பேரும் படுக்கையில் உருளாத நேரம் குறைச்சல். காணாததைக் கண்டவர் மாதிரி கொஞ்சுவதும், மயங்கிக் கிடப்பதும் கூட கடமையா என்ன? உதைக்கிறது. கதை நகராமல் மறுபடி மறுபடி சிவகுமார்—அம்பிகா ஸீன்களைக் காட்டி எரிச்சல் கிளப்புகிறார்கள்.

புருஷனுக்காக கார்த்திகை தீபம் ஏற்றி. குளத்தில் மிதக்க விட்டு. பாட்டுப் பாடி... என்ன சார் இது எத்தனை நாளைக்கு இந்தப் பழைய தாய்மார் உத்திகள்?

சுஜாதாவோ, அம்பிகாவோ, சிவகுமாரோ மோசமாய்ச் செய்யவில்லை.

ஆனால் யாருமே மனதில் நிற்காதது ஏன்?

டைரக்டரைக் கூப்பிடுங்கள். கேட்போம்.



# அன்னை பூமி



இந்த வேகத்தில் போனால் பிளாட்ஃபாரம் பிளாட்ஃபாரமாய் 3D கண்ணாடிகளை கூவி விற்றாலும் ஆச்சரியமில்லை. தேவர் பிலிம்ஸாயிற்றே! யானை கரடி, குதிரையெல்லாம் திரைக்கு வெளியே மூக்கை நீட்டுகின்றன. ஆனால் கொஞ்சமே கொஞ்ச நேரம்தான். மற்றபடி கதை தரையில் கிளம்பி, தண்ணீரில் பயணம் செய்து, ஆகாயத்தில் மிதந்து, பங்க்சராகி பொதேலென்று தரையிலேயே விழுந்து நொறுங்குகிறது.

விஜயகாந்த்—ராதாரவி பழைய டைப் காம்பினேஷன்தான். இருந்தாலும் சுறுசுறுப்பாய்ச் செய்திருக்கிறார்கள். நளினி, இளவரசி ஒட்டாத ஜிகினாக்கள். கவுண்டமணியிடம் கூட பல்லில்லாத நகைச்சுவைதான்.

ஒரு ஜெனரல் (எத்தனை நாளுக்கு போலீஸ் அதிகாரிகளைக் காட்டுவது என்று வித்தியாசமாய் ஆர்மி ஜெனரல்!). அவருக்கு அழகாய் ஒரு பெண் குழந்தை. அந்த ஜெனரலைக் கொன்றால் அடுத்தவருக்குப் பதவியாம். அதற்காக விஜயகாந்த்—வாக ஜோடியைப் பணம் வீசி வில்லன் கைக்குள் போட்டுக் கொள்கிறார். வில்லன் யார் தெரியுமா? குட் ஓல்ட் ஸ்ரீகாந்த். கழுத்து வரை முடியை வளர்த்துக் கொண்டு அவர் ராணுவத்தில் அதிகாரியாம். ஜெனரலின் குழந்தை மாதிரியே ஒரு அநாதைக் குழந்தையைப் பிடித்து இரண்டையும் மாற்றி விடுகிறார்கள். குழந்தையை மாற்றுவதற்கும் ஜெனரலைக் கொலை செய்யும் திட்டத்திற்கும் என்ன சம்பந்தம் என்று கடைசி வரை மர்மமாகவே வைத்திருக்கிறார்கள். போதாதற்கு கொலை செய்யச் சொன்ன ஜெனரலைக் கடைசியில் உயிரோடு பிடித்து வெளிநாட்டு ஆசாமிகளிடம் பேரம் பேசும் போது சத்தக் குழப்பம்.

3D என்பதால் மந்திரம், தந்திரம், மண்டை ஓடு எல்லாம் வேண்டும் என்று வேறு உறுத்தல். இடைவேளை வரை சுறுசுறுப்பாய் போகும் கதை அப்புறம் இந்த ஜிம்பா வேலைகளில் செக்கு மாடு கணக்காய் சுற்றுகிறது.

காமிராவின் சில அழகான கோணங்கள் பிரமிக்க வைக்கின்றன. தேங்காய் சீனிவாசனும், அனுராதாவும் கண் சிமிட்டும் நேரம் வந்து போகிறார்கள். வியட்நாம் சுந்தரம் கஷ்டப்படாமல், கஷ்டப்படுத்தாமல் வசனம் எழுதியிருக்கிறார்.

ஜெனரலாய் வரும் பிரபாகர் மிடுக்காய் இருக்கிறார். மின்னலாய் சண்டை போடுகிறார். அளவாய் முகத்துத் தசைகளை இறுக்கிக் கொள்கிறார். நல்ல செலக்ஷன்.

இளையராஜா—ஞானதி காம்பினேஷனில் "ஜாலி, ஜாலி" காதில் நிற்கிறது. படத்திற்கு நிறைய செலவு செய்திருக்கிறார்கள்.

அட்டைக் கோட்டையானாலும் அலங்காரமாயிருக்கிறது.

— ஜெயமன்மதன்

# திருப்பு முனையில் இவர்கள்






ஒருவருக்கு முப்பத்தைந்து வயது முடிவடைந்துவிட்டால் அவர் இளைஞர் காங்கிரஸில் இருப்பதற்குத் தகுதியற்றவராகி விடுகிறார். அதனால் நானும் இளைஞர் காங்கிரஸ் தலைவர் பொறுப்பிலிருந்து விலகிக் கொண்டேன். சரி, கடந்த நான்கு ஆண்டுகளில் அப்படி என்னதான் நான் சாதித்துவிட்டேன்?

மூன்று லட்சம் இளைஞர்களைத் தீவிர உறுப்பினர்களாகச் சேர்த்திருக்கிறேனே ... அது தான் சாதனையா? இல்லை; இல்லை! இதுவரை, தமிழக இ.காங்கிரஸில் உள்ள எந்த கோஷ்டியிலும் சேராமல் இளைஞர் காங்கிரஸை வழி நடத்தி வந்திருக்கிறேனே ... அதுதான் மிகப் பெரிய சாதனை!

இனிமேல் நான் என்ன செய்யப் போகிறேன்? தமிழகத்திலுள்ள எல்லா விவசாயிகளையும் ஒரே தலைமையின் கீழ் ஒருங்கிணைக்கப் போகிறேன். அவர்களுக்காகப் பாடுபடப் போகிறேன். ஏனெனில் விவசாயிகளின் கஷ்டம் எனக்குத் தெரியும். நானும் சின்ன வயதிலேயே கவலை இறைத்துக் கஷ்டப்பட்டவன்.

— தங்கபாலு, எம். பி.

❁ ❁ ❁ ❁ ❁

கடந்த பதினேழு ஆண்டுகளாகத் தொடர்ந்து எந்த வேலையைப் பார்த்து வந்தேனோ அதே வேலையைத்தான் இன்னும், இருபது ஆண்டுகளுக்குத் தொடர்ந்து செய்ய வேண்டும் என்று எண்ணிப் பார்த்த போது நான் மிகவும் சோர்ந்து போய்விட்டேன். TAFE அலுவலகத்தில் நான் பார்த்து வரும் அந்த வேலையை உதறித் தள்ளி விட்டு டைரக்டர் கே. பாலசந்தரிடம் உதவியாளராகச் சேர்ந்து விட்டேன்!

சினிமா உலகம் என்னைக் கெடுத்து விடும். அது எனது எழுத்துப் பணியையும் பாதித்து விடும் என்று எனது நண்பர்களெல்லாம் பயப்படுகிறார்கள். ஆனால், இனியும் நான் கெட்டுப் போவதற்கு என்ன இருக்கிறது? எந்த அளவுக்குக் கெட்டுப் போக முடியுமோ அந்த அளவுக்கு நான் ஏற்கனவே கெட்டுப் போய்விட்டேன். இனி கெட்டுப் போகும் வயதையும், இப்போது தாண்டி வந்து விட்டேன்.

சினிமா உலகத்தில் நான் என்ன புதிதாகச் சாதித்து விடப் போகிறேன் என்று கேட்கிறார்கள். நான் அவர்களுக்குச் சொல்லுகிறேன் ... எந்தச் சாதனையாளனும், தனது சாதனைகளை முன் கூட்டியே சொல்லிக் கொண்டு சாதிப்பதில்லை. தயவு செய்து என்னையும் பொறுத்திருந்தே பாருங்கள்!

— பாலகுமாரன்

❁ ❁ ❁ ❁ ❁

'கையிலே காசு வாயிலே தோசை ...' என்ற பாடலை 'அச்சமில்லை, அச்சமில்லை' படத்தில் நான்தான் எழுதினேன். அதற்குப் பிறகு நான் எந்தச் சினிமாப் பாடலையும் எழுதவில்லை. காரணம் என்னவென்று பலரும் என்னைக் கேட்கிறார்கள். என்ன செய்வது? மற்ற கவிஞர்களைப் போல இசையமைப்பாளர்களுக்கும், டைரக்டர்களுக்கும் என்னால் வெற்றிலைப் பெட்டி தூக்க முடியவில்லையே! இதுவேதான் காரணம்.

இதை விடுங்கள். நான் எழுதிய அந்த ஒரு பாடலையும் கூட, அதில் அரசியல்வாதிகள் தாக்கப்படுகிறார்கள் என்பதற்காகச் சென்னை வானொலி நிலையம் ஒலி பரப்புவதில்லை. ஆனால் டெல்லி வானொலி நிலையம் அதை அடிக்கடி ஒலி பரப்புகிறதாம். இது என்ன விசித்திரம்! சென்னைக்கு ஓர் அளவு கோல்; டெல்லிக்கு வேறொன்றா? புரியவேயில்லை!

— தமிழன்பன்

❁ ❁ ❁ ❁ ❁

மத்திய அமைச்சராகப் பதவி வகித்த நான் பலர் எண்ணுவது போல் இன்று அரசியலில் மௌனம் சாதிக்கிறேனா?

இல்லை; இல்லை! இப்போது தான் அரசியலைக் கூர்ந்து கவனித்து வருகிறேன். மூப்பனாரோடு பேசிக்கொண்டிருந்து விட்டு வந்தால் என்னை மூப்பனார் கோஷ்டி என்றும், சிவாஜியோடு பேசிக் கொண்டிருந்து விட்டு வந்தால் என்னை சிவாஜி கோஷ்டி என்றும் தயக்கமில்லாமல் முத்திரை குத்துகிறார்களே, ஏன் இந்த அவல நிலை என்று யோசித்துக் கொண்டிருக்கிறேன்.

இது மட்டுமா? தென் சென்னையில் இரா. செழியனை எதிர்த்து வைஜயந்தி மாலாவை போட்டியில் குதிக்கச் செய்து, அரசியலின் அறிவார்ந்த தன்மைக்கே ஓர் அவமானத்தைத் தேடித் தந்தவரின் மூளை யாருடைய மூளை என்று ஆராய்ந்து வருகிறேன். எதிர் காலத்தில் இப்படிப்பட்ட நிலை ஏற்படாமலிருக்க என்ன செய்யலாம் என்பதையும் ஆராய்ந்து வருகிறேன். நிச்சயமாக நான் மௌனமாக இல்லை.

— அரவிந்த பாலா பழனூர்.

சந்திப்பு: நமது நிருபர்

புகைப்படங்கள்: சுபா

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600032. (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani

Editor: K. Rajendran

# மின்னும் மேனி
# மெருகுக்கு ரெக்ஸோனா




மின்னி மிளிரும் மேனி... என்னாளும் உங்கள் பொன்னான கனவு...நிறைவேற வரமளிப்பது ரெக்ஸோனா.

சரளம், கருவா, கிராம்பு, ஹபுஷா (தேவதாரம்) ஆகிய நாலு வகை இயற்கைத் தைலங்களின் நற்கலவையான ரெக்ஸோனா...சருமப் பராமரிப்பிற்கு இயல்பான வழியாகும்.

**ரெக்ஸோனா** உங்கள் மேனியை மென்மையோடு மெருகு மிளிர வைத்திருக்கிறது.

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

LINTAS RX 84 2012 TM